# வல்லாள ராசன் இசை நாடகம்

## (யட்சகானம்)

பதிப்பாசிரியர் :

டாக்டர் **எஸ். ஏ. கே. துர்க்கா**

எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,

விரிவுரையாளர், இந்திய இசைத்துறை,

சென்னைப் பல்கலைக் கழகம்.



# வல்லாள ராசன் இசை நாடகம்

## (யட்சகானம்)

பதிப்பாசிரியர் :
டாக்டர் எஸ். ஏ. கே. துர்க்கா
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
விரிவுரையாளர், இந்திய இசைத்துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்.



என் அருமை அன்னை

அன்புத் தந்தை

இவர்கள்தம் திருவடித் தாமரைகளுக்கு

இச்சிறிய நூலை

அன்பு காணிக்கை யாக்குகிறேன்.



December 19, 1977

MESSAGE

I am glad to know that a book on 'Tamil Opera' by Dr. S. A. K. Durga, Lecturer in the Department of Indian Music, University of Madras, is being released by Dr. Raja Sir Muthiah Chettiar at Tamil Isai Sangam, Madras on 25th December 1977.

I wish every success in her endeavour.

*Malcolm S. Adiseshiah*

# வாழ்த்துரை

இயலும் இசையும் தமிழுக்கு இரு கண்கள். அதேபோல் பாட்டும் கதையும் நம் இலக்கியத்தில் நீங்கா இடம் பெற்றுவிட்டன. கதைகளைப் பாட்டாகச் சொல்லுவது நம் வழக்கினுள் தோய்ந்து விட்டது. நாடகச் சுவை பொருந்த அருணபுரி மன்னன் ''அரசாளும் வல்லாளன்'' கதையைப் பாட்டாக, யட்சகானமாக வடிக்கிறது இந்நூல். சுவட்டில் மறைந்துவிட்ட இக் கதையினைத் திருமதி டாக்டர் துர்க்கா முயன்று உருவாக்கி இசை வடிவம் தந்துள்ளார். இக் கன்னி முயற்சி தொடர்ந்து வளர்ந்து பல்கலைக்கழக இசைத் துறையில் பல ஆய்வு நூல்கள் வெளிவந்து மக்களுக்குப் பெரிதும் பயன்படும் வண்ணம் அமையும் என நம்புகிறேன்.

திருமதி டாக்டர் துர்க்கா அவர்தம் முயற்சிக்கு என் பாராட்டுக்கள். அவர்தம் இசைப் பணியும் பாவாணர் புகழும் பந்நூற் பணியும் மேன்மேலும் வளர வாழ்த்துகிறேன், ''பொங்கரவின் பணி பூண்ட புனிதர்'' தம் திருவருளும் பொலியப் பரவுகிறேன்.

சென்னை
22—12—77

செ. க. குமாரசாமி
பதிவாளர்
சென்னைப் பல்கலைக்கழகம்

# முன்னுரை

நான், இசை நூல்களைப் பற்றி ஆய்வு செய்துவந்த பொழுது, சென்னை அரசினர் சுவடி நூலகத்தில் இருந்த தமிழ் யட்சகானச் சுவடிகளைக் காண நேர்ந்தது. ஒவ்வொரு சுவடியையும் எடுத்து முழுமையாகப் படித்துப் பார்த்த போது தான் அவற்றின் பழமையை என்னால் உணர முடிந்தது. அவற்றுள் ஒன்ருகிய '**வல்லாள ராசன் யட்சகானம்,** என்ற சுவடியை மட்டும் மீண்டும் மீண்டும் படித்து இசை நுணுக்கங்களை யெல்லாம் இயைத்து நோக்கினேன். பழமையை வெளிப்படுத்தும் வண்ணம் இந் நாடகத்தை அச்சிட்டு வெளியிட வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. இன்று அவ்வெண்ணம் முழுமை பெற அருள் புரிந்த அருணசலேசுவரரை என் மன மொழி, மெய்களால் வணங்குகிறேன்.

பல்கலைக் கழகத்தில் பணியாற்றி வருகின்ற நான், இந் நூலை வெளியிடவிருக்கும் விருப்பதைத் தெரிவித்தபோது தடையேதுமின்றி உள்ளன் போடு அனுமதித்ததோடன்றி, இத்துறையில் மேலும் மேலும் என்னை ஊக்குவிக்கும் வண்ணம் வாழ்த்துரைகளையும் வழங்கியருளி என்உள்ளத்தை மட்டற்ற மகிழ்ச்சியில் மூழ்கடித்திருக்கின்ற சான்ருேர் களாகிய சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், **டாக்டர் மால்கம். ச.** ஆதிசேஷைய்யா, எம். ஏ., பிஎச். டி, அவர் களுக்கும் பதிவாளர், திரு. செ. க. குமாரசுவாமி எம். ஏ., அவர்களுக்கும் பணிவார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலுக்கு முன்னுரை வழங்கி, மனமகிழ்ந்து வாழ்த் தியருளிய, கர்நாடக இசைத்துறை வல்லுநரும் அகில இந்திய வானெலி நிலையங்கள் பலவற்றில் இசைத்துறை இயக்குநராகப் பணியாற்றி, யட்சகானங்கள் பலவற்றை இயக்கிய அனுபவம் நிறைந்தவருமான **டாக்டர் எம். பாலமுரளி கிருஷ்ண** அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியை உரித் தாக்குகிறேன்.

கலைக் களஞ்சியத்தின் பதிப்பாசிரியரும் பாடலாசிரியரும் நொண்டி நாடகங்கள் போன்ற பழந்தமிழ் இலக்கியங்களின் சிறந்தஆராய்ச்சியாளருமான திருவாளர் **ம. ப பெரிய சாமித்தூரன்** அவர்கள் இச்சிறு நூலினை முழுமையாகப் பார்த்து, தங்கள் உள்ளக் கருத்தை மதிப்புரையாக அளித்திருக்கிறார்கள், அவர்களுடைய அன்பிற்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஓலைச் சுவடி வடிவத்திலிருந்து அச்சாகி நூல் வடிவம் பெறும் நிலைவரை, எல்லாவகையானும் உறுதுணையாயிருந்து, இந்நூலை உருவாக்கித் தந்த சென்னை, நக்கீரர் கழகம், திருவள்ளுவர் தமிழ்க்கல்லூரியின் சிறப்பு முதல்வரும் அரசினர் சுவடி நூலகத் தமிழ்ப் புலவருமான திரு. **பூ. சுப்பிரமணியம் எம். ஏ.. பி. லிட் , பி டி** , அவர்களின் உதவியை என்றும் மறவா கடப்பாடுடையேன் ஆவேன்.

இந்நூலை வெளியிட ஊக்கமளித்த சென்னை, மாநிலக் கல்லூரி, வடமொழித்துறைத் தலைவர் பேராசிரியர் **ர.ந. சம்பத்** எம்.ஏ., அவர்களுக்கும் அன்பு நண்பர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி உரியதாகும்.

ஓலைச் சுவடி வடிவிலிருந்து படியெடுத்து அச்சிட்டுக் கொள்ள எவ்விதக் கட்டுப்பாடுமின்றி அனுமதி தந்துதவிய **சென்னை அரசினர் சுவடி நூலகத்தாருக்கும**, குறைந்த நாட்களில் அழகுற அச்சிட்டுத் தந்து உதவிய **ஐடியல் அச்சகத்தா**ருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

(தமிழிசை ஆண்டுவிழாவில் இந்நூலினை வெளியிட்டுச் சிறப்பித்த, சென்னை, தமிழிசைச் சங்கத்தினருக்கு என் வணக்கமும் நன்றியும் என்றும் உரித்தாகும்.

சென்னை—5
25—12—77 **டாக்டர் எஸ். ஏ. கே. துர்க்கா**

# Foreword

This work deals with the type of musical form of South India which is known as Geyanatakam or Isai-natakam. It has a story set with songs with intermittent verses and prose passages in both conversational and indirect speech The Yakshagana forms belong to the type of Geyanatakam or musical plays.

Yakshaganas are musical plays which originated in Andhrapradesh during the time of Nannayya (11th century) It evolved first as a dance form and later developed into a musical play or geyanatakam. The Yakshaganam is also known as Veethinatakam in Andra meaning Street Play.

Dr. Durga has taken the pains to find out that there are Yakshagana forms in Tamil language too One of the tamil Yakshaganas from the so far available five tamil Yakshaganas from the Government Oriental Manuscript Library, Madras has been edited with a critical instruction in English and Tamil by her which is no doubt a laudable attempt. Her doctoral thesis being "Operas in South India", She is able to give an analytical study on the structure and evolution of Yekshagana forms in the critical introduction. She has also suggested the ragas that can be used for the songs which are not to be seen in the Original Manuscript. This will certainly help the producers to stage the play as a tamil opera in future. Classical music of carnatic music can be popularised more easily by theatrical representations as theatre is an effective mass-media. I appreciate her effort in publishing this Tamil Yakshagana by which a tamil literary cum musical work has been brought into limelight and by making use of the classical type of ragas of carnatic music into the play, the musical aspect is also been projected.

I wish Dr. Durga every success, in her research.

*M. Balamuralikrishna.*

# Critical introduction for the "VALLALARAJAN YAKSHAGANAM"

## ISAINATAKAM or OPERA

Opera is a special kind of theatre with music. Operas of South India are entirely different from the Western opera. The word opera is used to denote a type of musical form which has a story set with songs in classical music of South India with verses and prose passages in both conversational and indirect style. The composers of these works name their compositions as Natakam, Keertanai Yakshaganam or charitram, Arunachala kavirayar's "Ramanatakam" can be said as the first tamil opera which belongs to 16th century.

The word opera is properly the plural of the Latin word 'Opus' meaning work. It is a shortened form of the Italians pera in musical that is a musical work. கலைக்களஞ்சியம் the Tamil Encyclopaedia defines the term Isainatakam and Geyanatakam as opera.[1] A South Indian opera is not merely a drama set to music. It is both a musical and literary form combined. Music is the vital part of the play and it acts as a powerful commentary on several dramatic situations.

The difference between a drama and an opera is one of emphasis. The action is simpler in an opera than in ordinary play. The plot and characterisation are set in broad outline rather than in detail in an opera. In otherwords, the plot is only the means to an end in a musical

setting and the way in which it is performed by the vocalists and instrumentalists. As speech is not employed in an opera, music serves many pnrposes in relation to the words.

As opera depends upon music for expression, it cannot be realistic. The opera lovers accept the convention of actors conversing in songs. In an opera the beauty and expressiveness of the music really holds the audience. The music intensifies the dramatic force but eases the dramatic tension, The purpose of the connecting verses and prose passages are to convey the audience a 'Programme' so that they can better appreciate the expressiveness of the strictly musical portions. The entire dramatic tempo is lower than the tempo of the drama, This is because the entire play is sung throughout in opera. It also takes a longer time for the development of the plot than the actual time required for an ordinary play. Unlike a drama, which can be enjoyed only by those who know the language of the play. Opera can be appreciated to a certain extent even by those who do not follow the text through the beauty of the music.

## YAKSHAGANA PLAYS:

"Yakshagana" is a common name given to one of the troditional types of the vernacular dramas belonging to the linguistic areas of Kannada, Telugu and Tamil.

The Yakshaganas are completely cast in the mould and technique of the sanskrit dramaturgy and South Indian classical music, These dramas are staged in operatic manner having music and mimic representation,

Though 'Yakshagana' is a sanskrit term, it is not to be found in any of the sanskrit or sangita literature. In 'Sangitasudha' which was written during 1628 A,D.' by Govinda Dikshita. a single reference is made. He

mentions the Yakshagana 'Sri Rukmani Krishna Vivaham." Some scholars are of the opinion that the name 'Yakshagana' has been named after the form of a particular type of music called Yakshagana But so far it is not able to be known about this particular type of music. The "Sangitasudha" says that an earlier treatise attributed to Aanjaneya has taken into account the music sung by the Yakshas.

'Yakshagana' is a compound word consisting of Yaksha and gana. The etymology of the word 'Yaksha gana' is still not correctly explained. M. Govinda Rao says in his article on ' Yakshagana in Karnataka" in the Annals of Oriental Research. Madras that a telugu work called "Kameswaripata" alludes to the traditional origin of Yakshagana. He says that 'there is a passage which says that Lord Siva sent two Yakshas equipped with the necessary instruments to sing these yakshaganas and ordered them to serve Kamavalli', the deity of Kamapalli, successively generation after generation." From this we can infer that Yakshaganas were performed before deities on festive occasions.

The legend goes that the night before Dipawali Day is known as Yaksharatri. Kubera, the king of Yakshas got back all his wealth from Bali on that day and everyone rejoiced with music and dance. It might have been called Yakshagana as the music is by yakshas. There is another story that the Yakshas went to Sukracharya and learnt from him this particular kind of music and drama. Probably this might have been the reason for calling a type of play called 'Yakshagana'. The other openion is that there were a community called Jakkulu in Andhradesa who were performing music and dance and the term Jakkulu changed into Yakshas and their dramatic performances

were known as Yakshaganas. In Andhra, the dancing girls dressed as Yakshas and performed the dance at temple rituals and royal courts. Since it was displayed with that particular costume pertaining to the yakshas, it came to be known as yakshaganas.

The Yakshagana forms were originated first in Andhra. From 11th century onwards, the reference for Yakshagana is seen in the work of Nannayya. Palkuriki Somanatha (13th century) who lived after Nannayya says that the Yakshagana was performed by a single dancer and it did not develop into a musical drama. The 'Kridabhirama' also says that a " Jakkula Purandari "—a woman of the Jakkula or Yaksha tribe performed the yakshagana which deals with the love of Kamavalli Mahalakshmi with Kaitabhari—God Mahavishnu to the accompaniment of a drum the anklets worn by the dancer keeping time to the varried notes sung in loud tones. This is known as Jakulla pata in Telugu which is equivalent to the sanskeir term " Yakshaganam ". The sole performance later developed into a musical play wherein a number of persons took part to assume various characters to enact the play on the stage. The Yakshas are called Jakkulas and they belonged to the forest tribes of Andhra. The Yakshaganas are also known as Veethinatakam in Andhra meaning street play. It was during the time of Naik and Maratta rulers of Tanjore, that Yakshagana forms won high recognition as a type of literary composition. The Yakshagana which attained a literary status under the rule of Naiks became a full fledged musical composition during the period of Maratta rulers. They were referred as Madhura kavitas in which srungara rasa permeated and consisted of both songs and Vacana or prose passages and padyams or poetry.

In Karnataka, the Yakshagana is a colourful play with lively songs and dance besides dialogue. Nrutta in Yakshagana is interesting The dialogues are done by the actors themselves When they stop their speech, the musician sings the songs and the actors perform the pure dance or Nrutta. The folk dance Kolattam' is also used Karnataka Yakshagana. The stories are selected from Ramayana and Mahabharata but importan e is laid on heroism and chivalry. Normally, the actors speak the dialogue but very rarely sing snatches of the song along with the Bhagavatar. The Karnataka Yakshagana is remarkable more for its dance than for its music or story.

In Tamil Nadu, a few Yakshaganas are written in Tamil language consisting of songs and Viruttams besides prose passages. So far only five Yakshaganas are found which are in the form of palm leaf manuscripts and paper manuscripts in the Oriental Manuscripts Library, Tamilnad Government Madras. They are written based on the model of Telugu Yakshaganas.

The composers took pride in writing Yakshaganas as they have both literary and musical values. They are very popular with the rural folk as well as kings. Many kings themselves have written Yakshaganas. In Karnataka and Andhrapradesh, the Yakshaganas are staged as Musical plays with and without Nrutta respectively. But so far the Tamil Yakshaganas have not been staged.

**The Structure of Yakshagana forms:**

'Yakshagana' can be described as a type of musical and literary form where in a story is set with songs with intermittent verses and prose passages in both conversational and indirect style.

The Yakshaganas belong to the operatic type of compositions. They do not have a very elaborate Purvanga

ceremonies on the stage as is found in provincial theatres. But they have the preliminary part as invocation to the various Gods beginning from Lord Vigneswara. The appearance of Sutradhara or Kattiyakkaran is only found in a very few Yakshaganas. In the introductory part itself, the name and type of the play will be announced. This invocatory part builds up the musical atmosphere for the whole play.

Yakshaganas do not have acts and scenes and they are continuous plays. It contains songs to be sung by different charactors. The portion wherein the indirect speech is used serves as connecting link to proceed the story further and thus gives the continuity for the play. Normally, this passage will be in prose but occassionally in verse form or song form. The narrative and descriptive passages help to arrange the scene settings which are necessary for staging the play. The characters converse through songs in Yakshaganas. The conversational songs may be in one and the same raga or may be set in different ragas. They end the play with a phalasruti or Benediction.

The story in the Yakshaganas are usually well known The theme is religious and Bhakti rasa permeates the whole play. The Yakshaganas are not mere dramas in form and structure. The whole composition runs as a form with the story element having songs and verses in conversational and indirect style with intermittent prose passages. The story is told in a dramatic way through songs and verses and hence these Yakshaganas can be either enacted on the stage or can be read as a literary piece or can be sung through a single person or a group of persons,

A general study of the music of the Yakshaganas reveals that the ragas are so chosen as to depict the apt mood and rasa for the different situations. Va riou

possible uses of the same rage for different sentiments have also been found in these operas. There is very little sangatis and intricate gamakas in the music of the Yakshaganas.

The ragas which are used are mostly rakti ragas and are well suited to be sung in the evening or at night. All the major ragas such as Todi, Bhairavi, Kalyani, Sankarabharana and Kambodi find a place in Yakshaganas. The verses are sung mostly in Aanandabhairavi Kedara goula, Nadanamakriya, Yadukulakambodi, Mohana and Saveri. The music is mostly repetative and the range is also restricted. The tempo of the songs is mostly slow.

The South Indian Yakshaganas use both musical forms and literary forms. The opera composer must be proficient in both poetic and literary skill as well as musical ability. The tamil Yakshaganas use the musical forms Daru, Chindu and Keertanai. The present opera Vallalarajan Yakshaganam makes use of a few Chindus and Darus. Among literary forms, the tamil operas use" வெண்பா, கலித்துறை, விருத்தம், தாழிசை and its varieties apart from the form Dvipadai and Ardhachandrikai which are borrowed from Telugu operas.

The form Daru belongs to the sphere of applied music. It is a story song. The origin of Daru can be traced from the ancient form known as 'Dhruva'. The Dhruvas are a class of old Indian stage songs which figured in the dramas of very old time referred to in our old dramatic literature such as Bharata's Natyasastra. The songs were called Dhruvas because they form the basis of the dramatic theme and they stabilise the production. They are a class of versified metrical compositions. The form Dhruvas are first mentioned in the text of Bharata. He says in his invaluable work " Natyasastra " that

" The Dhruva is so called, because in it words, Varnas, Alankaras, Tempo, Jati and Panis, they are regularly (Dhruvam) connect with one another.

(Ch. XXXII-Verse. VIII).

The main purpose of the Dhruva songs is to induce the appropriate rasa. The songs do not contain much *embellishment and rhythm and mainly contribute* to evoke the particular rasa. Dhruva songs are a class of versified metrical compositions. Bharata mentions five kinds of Dhruva songs namely pravesiki, Naishkramiki, Prasadiki, Akshepiki and Antara while Sarangadeva in his in his Sangitaratnakara (1210-1247 A.D.) describes 16 kinds of Dhruvas.

The musical form Daru which is used in Telugu and Tamil operas has emerged from these Dhruva songs which were used in the ancient sanskrit dramas. Darus are composed on a love theme or on a historical or puranic theme. Sometimes it is also composed in praise of a patron. In Darus, there is profusion of Sahithya The form Daru resembles the Kirtana. It has the Sections Pallavi, Anupallavi and Charanas. The presence of many charanas and the charanas being sung to the same music is a characteristic feature of Daru.

The music in Darus is of simple type and there are neither difficult and elaborate raga sancharas nor sangatis. The range of the pieces rarely exceeds one and a half octaves. There are also no chittarwaras or swarasahitya which are found in some kritis. The Darus are sung mostly Madyamakala. They are very effective mediums to portray various rasas.

There are different types of Darus such as Patrapravesa Daru, Varnana daru, Swagata daru, Samvada daru, Uttarapratuttars daru, Pralapa daru, Tillana daru, Kappayi daru, Kummi daru, Kolatta daru and Oradi daru.

**Chindu** is a tamil song of folk type It is used, only in Tamil operas. The Kuravanjis and Tamil Yakshaganas use the form chindu. There are three types of chindus of which the Nondi Chindu is profusely used in Tamil operas and Terukuttu plays. The other two types of chindu are Kavadi chindu and Vazhinadai chindu.

Besides these musical forms, the tamil operas also use Keertanai. The Keertanai has the angas Pallavi, Anupallavi and one or more charanas. The music as well as the tala are simple. Profusion of words figure as in Daru and Charanas are sung to the same music like the Daru. The ange of the pieces is normally limited to one or one and a half octones.

Apart from these musical forms, they make use of literary forms such as Virutham, Venba, and the different types of poetic forms.

**The date of the present Yakshagana Vallalarajan Yakshaganam.**

Yakshagana forms won high recognition as a type of musical and literary composition, during Naiks rule of Tanjore. During 16th century, the Yakshaganas made use of the forms Ardhachandrika and Ela. Different types of talas such as Tiriputa, Jampa, Ata and Eka tala were used. During the period of Vijayaraghava Naik 1633-1674, the forms Ardhachandrika fell into oblivion and Darus were introduced profusely. The earliest yakshagana 'Sugriva Vijayam' of Rudrakavi (1570 A.D.) makes more use of the form Ardhachandrika. As we find in the present Yakshagana 'வல்லாள ராஜன் யக்ஷகானம்' the presence of Ardhachandrika forms more than Darus we can infer that it was written **during 16th century**. The author of the work is not known.

We find no reference of the "வல்லாள ராஜன் சருக்கம்" in the first work "அருணசலப் புராணம்"

"by சைவ எல்லப்ப நாவலர்" The work "அருணசலக் கீர்த்தனை" by Veeranapulavar which was printed in 1856 does not contain the story of Vallalarajan. It is said that the story of Vallalarajan is only a later interpalation. The work by "மழவை மஹாலிங்கம் பிள்ளை" entitled "அருணசல புராணமும் மூலமும்" (1912) includes the story of Vallala as "வல்லாள ராஜன் சருக்கம்" in his work. (B V. Namasivaya Mudaliar, Niranjan Press, Madras), Based on the story in the dramatic and musical works, Mahalingam Pillai might have introduced the story later in the work "அருணசல புராணமும் மூலமும்". The story of Vallalarajan given in the book of Mazhavai Mahalingam Pillai is identical with the story of the Tamil Yakshagana.

**Historical reference for the King Vallalarajan referred to in the Tamil Yakshagana:**

The King Vallala referred in the present work must have been the king Ballala III, the Hoysala king [1] (1291-1342 A.D.) He changed the capital from Dwarasamudra to Tiruvannamalai.[2] In 1328, the Muhammadans destructed the city Dwarasamudra and hence Ballala III transferred his capital to Tiruvannamalai, here he is said to have resided constantly during the last 15 years of his reign 1328-1343.[3] The place Tiruvannamalai was called **Unnamelapattana.** This was going on along the northern frontier of his kingdom, Ballala III was obliged to hasten to Tiruvannamalai, his southern capital.

Though some historians say that the last king is Ballala IV who ascended the throne in 1343 after the death of Ballala III in 1342 at Tiruchi, he was at the throne only for three months and took asylum in Konkan and finally defeated in 1344. He was killed soon after his accession. Ballala, IV was not at all a powerful king as described in the Yakshagana work and as he was a very weak ruler his name is not found in any inscription. Hence the author

R.C. Majumdar in his book "The Struggle for Empire" has given as the Ballala III is the last Hoysala king. He was a very powerful king and he erected the victory pillar upto Rameswaram in the South. It can be very well said that the hero of the present Yakshagana, the king Vallalarajan is none other than the powerful Hoysala king Ballala III. (1291-1342) from further evidences. Mr. J. Duncan M. Dewelt says in his book, "The Hoysalas—A Medieval Indian Royal Family" that "The Arunachala-*puranam, a much later composition, retails* a story of Ballala's having been sonless and having gone to certain improbable lengths to acquire a son during his stay at Tiruvannamalai. The 7th canto of that work, called Vallala Maharajan carukham, the chapter on the great king Ballala, gives the impression that the king was well established there and was renowned for his virtues." (170 p.)

Ballala III was in his eightees and he had been on the thrine for 50 years. Ballala III is believed to have constructed the third enclosure wall of the temple and its four gopurams, and established a grant for an yearly festival to be condueted there in the month of Thai (Jan. - Feb.) in the name of Vallalaraja in the year 1341. These informations are adequate to identify **the hero of this Yakshagana to the king Ballala III:** But the incident described in this story is based on the story in the Arunachala-puranam by Mahalingam Pillai The story is not supported by historians because Ballala III had a son and Ballala IV, his son was crowned at Tiruvannamalai when he was little short of 55 years. Hence the story may be the poet's imagination.

Madras-5
25th Dec. 1977

Dr. o. a. k. Durga

---

1. Majumdar R. C., The struggle for Empire. Vol V. 232 p.
2. Venkataramanayya, Kampili and Vijayanagar, Madras, 1929, 20 p.
3. Ibid.

# அணிந்துரை

## திரு. ம. பெ. தூரன் அவர்கள்

யட்சகானம் என்பது ஒரு வகையான நாட்டிய நாடகமாகும். இது நாட்டுப்புற, (Folk), நடன வகையைச் சேர்ந்தது. இருந்தாலும் தமிழ்நாட்டிலும் கேரளத்திலும் உள்ள உயர்ந்த கலைமரபுகளை இதில் ஆங்காங்கே காணலாம்.

யட்சகானத்தில் நடிப்பவர்கள் அனைவரும் ஆண்களே. இதை நடிக்கும் ஒவ்வொரு குழுவிற்கும் மண்டலி என்று பெயர்.

ஒவ்வொரு மண்டலியும் ஒரு பாகவதர் பொறுப்பில் அமைந்திருக்கும். அவரே நாடகத்தைத் தயாரித்துக் கொடுப்பார். நடிகர்கள் ஆடம்பரமான உடைகளும், ஆபரணங்களும், பாகங்களுக்கு ஏற்றவாறு கிரீடங்களும் அணிந்திருப்பார்கள். அவர்கள் நாட்டியமாடி நடிப்பதோடு உரையாடுவார்கள். பாட்டும் பாடுவார்கள்.

யட்சகானக் கதைகள் பெரும்பாலும் இராமாயணம், மகாபாரதம் ஆகிய பெருங்காப்பியங்களில் கூறப்படுகின்ற நிகழ்ச்சிகளை ஒட்டியவையாக இருக்கும். சமூக விஷயங்களை இதில் அநேகமாகச் சேர்ப்பதில்லை. ஆனால் சில ஆண்டுகளாக அவற்றையும் ஓரளவு சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

யட்சகானம் நாட்டுப்புற நாடகமாகையால் அதற்கு ஏற்றவாறு பெரிய எண்ணெய் விளக்குகள், தீப்பந்தங்கள் ஆகியவைகளை வைத்துக்கொண்டு நாடகம் நடைபெறும். மிருதங்கம், செண்டை முதலான வாத்தியங்கள் ஒலிக்கும்.

யட்சகானம் மைசூர் முதலான கருநாடகப் பகுதியிலும் ஆந்திர நாட்டிலும் நடைபெற்று வருகிறது. அங்கு நடைபெறும் நாடகங்கள் கன்னடம் அல்லது துளுவ மொழியில் எழுதப்பட்டிருக்கும்.

தமிழில் யட்சகானம் உண்டு என்று இதுவரையில் நான் கேள்விப்பட்டதில்லை. திருமதி துர்க்கா அவர்கள் தமிழிலே ஐந்து யட்சகானங்கள் இருப்பதாகக் கண்டறிந்திருக்கிறார். இவற்றுள் ஒன்றும் அச்சிடப்படவில்லை.

சிறுத்தொண்டன் யட்சகானத்தைத் திருச்சி வானொலி நிலையம் இசைநாடக நிகழ்ச்சியாக சில ஆண்டுகளுக்கு முன்பு ஒலிபரப்பிற்றும்.

இப்பொழுது வல்லாளராசன் யட்சகானம் திருமதி துர்க்கா அவர்களின் ஆர்வம் மிக்க முயற்சியில் அச்சிடப் பெற்று நூல் வடிவில் வெளி வருகின்றது. இதில் உள்ள பல வகையான இசைப்பாடல்களுக்குத் தாளம் மட்டும் ஏட்டுப் பிரதியில் குறிக்கப்பட்டுள்ளனவாம். ஏற்ற இசை வடிவங்களை அமைத்து அவற்றின் இராகங்களைத் திருமதி துர்க்கா அவர்கள் குறித்திருக்கிறார்கள்.

இவ்வாறு யட்சகானத்தை வெளியிட்டமைக்காக திருமதி துர்க்கா அவர்கள் எல்லாருடைய பாராட்டுதலுக்கும் உரியவராகிறார்கள்.

வல்லாளராசன் யட்சகானத்தின் தொடக்கத்தில் வந்துள்ள ஆசிரியப்பாவில்

''பண்ணுறு இசையினால் பாருளோர் மகிழ
நண்ணுறவே யட்சகானமாய்''

என்ற வரிகள் வருவதால் இது யட்சகானம் என்று தெரிகின்றது.

இதுவரையில் யட்சகானம் கர்னாடகத்திற்கும் ஆந்திரப் பிரதேசத்திற்குமே உரியது என்ற எண்ணம் நிலவி வந்தது. திருமதி துர்க்கா அவர்களின் முயற்சியால் தமிழிலும் யட்சகானம் உண்டு என்பது தெரிய வந்துள்ளது.

அதற்காக அவர்களைப் பாராட்டுகிறேன்.

சென்னைப் பல்கலைக் கழக இசைத்துறையில் பணியாற்றுகின்ற திருமதி துர்க்கா அவர்கள் இதை நாட்டிய நாடகமாக யட்சகான முறையில் நடத்திக்காட்ட முயல்வார்கள் என்றும் எதிர்பார்க்கிறேன். அவ்வாறு பழைய மரபின்படி நடத்திக்காட்டும்போதுதான் நூலைப்படிப்பதை விட யட்சகானம் பல மடங்கு சிறப்படையும் என்பது சொல்லாமலே விளங்கும்.

நூல் வடிவில் இதை வெளியிட்டதற்கும் நமது நன்றி உரியதாகும்.

# பதிப்புரை

**நாடகம் :**

இன்ப துன்பங்களின் இடையறு போராட்டத்தை யுடைய ஒரு சிறந்த, உயர்ந்த வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டுவதே நாடகம் ஆகும். சமயச் சடங்குகளே நாடகத்தின் பிறப்பிடங்களாய் அமைந் தன. நாடகங்கள் யாவும் தெய்வத் தொடர்புடைய இலக்கியங்களாகவே விளங்கின. இந்நிலை தமிழில் மட்டுமன்று; எல்லா மொழிகளிலும் இந்நிலையே இருந்து வந்திருக்கிறது.

**தமிழில் நாடகங்கள் :**

'இயலிசை நாடகம்' என்னும் சொற்றொடர் முறையே நாடகம் என்பது மிகப் பழங்காலந்தொட்டே தமிழில் இருந்து வந்தது என்பதை உணர்த்தும். பரத சேனாபதியம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் போன்ற நாடக இலக்கண நூல்களே இருந்தன என்றால் நாடக இலக்கியங்கள் இருந்தன என்று கூறவும் வேண்டுமோ? 'வள்ளிக் கூத்து' என்பதே மிகப் பழமை வாய்ந்த நாடகமாகும்.

பௌத்த, சமண சமயங்களால் வெறுக்கப்பட்டு, தமிழ் நாடகங்கள் இடைக்காலத்தில் அழிவுற்றன. இடைக்கால அழிவிற்குப் பின் தமிழ் மன்னர்களால் போற்றப்பட்டு இராஜ ரஜேஸ்வர நாடகம், சரபேந்திர பூபாலக் குறவஞ்சி போன்ற நாடகங்கள் தோன்றின.

நாடகங்கள் தெய்வத் தொடர்புடையவை, புரா ணக் கதைகளையே கருவாகக் கொண்டவை என்பன

போன்ற நிலை மாறி, மன்னர்கள், மக்கள் போன்றவர் வர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் மக்களால் பாராட்டப் பெற்ற சான்றோர்களின் பிறப்பு, வளர்ச்சி, அரிய ஆற்றல்கள், அரிய செயல்கள் போன்ற நிகழ்ச்சிகளும் சமுதாயப் பழக்க வழக்கங்களும் நாடகக் கருவாக அமையத் தொடங்கின. இசைப் பாடல்கள், செய்யுட்கள், உரைநடை போன்றவற்றால் அமைந்து நடனம் முதலிய கலைகளும் சேர்ந்து உண்மையும் கற்பனையும் இணைய இயற்றப்படும் நாட கங்கள் பலப்பலவாகத் தமிழில் தோன்றி, தற்காலச் சீர்திருத்தக் கருவிகளாக வளர்ந்து வருகின்றன.

## இசை நாடகம்:

**அமைப்பு:**

இசைப் பாடல்கள், விருத்தங்கள் போன்ற வற்றால் இயற்றப் பெற்று, நாடக வடிவில் அமைக்கப் பட்ட நூல், இசை நாடகம் (அல்லது) ஆபெரா (Opera) என்று கூறப்படுகிறது.

> "ஆபெரா என்பது இசை நாடகமாகும்; அது இசைப்பாடல் வடிவில் அமைக்கப்பட்ட ஒரு நாடகமாகும் - Opera is a musical Drama; It is a play of any description set to music"

என்று கூறுவர் பேராசிரியர் திரு. சாம்பமூர்த்தி அவர்கள்.

"இசைநாடகம் (Opera): சாதாரண நாடகத்தில் பாட்டும் இசையும் இருக்கலாம்; ஆனால் அவை முக் கியமானவையல்ல. இசை நாடகத்தில் பாட்டும் இசையுமே முக்கியம்." என்று விளக்கம் தருகிறது கலைக் களஞ்சியம்.

**பெயர்கள் :**

தென்னிந்தியாவில் தமிழ், தெலுங்கு, கன்னடம், வடமொழி ஆகிய மொழிகளில் இவ்விசை நாடகங்கள் காணப்படுகின்றன. இசை நாடகங்களை வடமொழி நூலாசிரியர்கள் காவ்யம், பிரபந்தம் என்ற பெயர்களாலேயே கூறுவர்.

தமிழ், தெலுங்கு மொழி நூலாசிரியர்களோ கீர்த்தனை, நாடகம், யட்சகானம், விலாசம், சபா, வசகப்பா, சண்டைநாடகம், காலையிட்டு நாடகம், சரித்திர நாடகம் என்ற பெயர்களாலேயே கூறியுள்ளனர். சான்றாக, ராமநாடகம், பாரதநாடகக் கீர்த்தனை, இரணியன் வாசகப்பா, சாரங்கதர சரித்திரப்பா, முத்தையா விலாசம், பத்மினி சபா, வல்லாளராசன் யட்சகானம் போல்வனவற்றைக் கூறலாம். இசைநாடகங்கள், கேயநாடகங்கள் என்ற பெயர்களால் இவற்றைக் குறிப்பிடவில்லை.

ஆனால், பதினைாறுவது நூற்றாண்டில் 'பிரதாப ருத்திர தேவர்' காலத்தில் வாழ்ந்த 'ராய ராமானந்தர்' என்பவர், தாம் வடமொழியில் எழுதிய 'ஜகன்னாத வல்லபம்' என்ற நூலில் 'சங்கீத நாடகம்' என்ற பெயரைக் குறிப்பிட்டிருக்கிறார்.

**இசை இலக்கியங்கள் :**

ஆபெரா எனப்படும் மேனாட்டு நாடகங்கள், இசைப் பாடல்களால் இயற்றப் பெற்று, பாடி நடிக்கப் படுகின்றன. ஆனால் தென்னிந்திய இசை நாடகங்களோ இசைப் பாடல்களும் செய்யுள் வகைகளும் இணைந்து, இசை இலக்கியங்களாகவே திகழ்கின்றன. அதாவது Musical and Literary form combined என்று கூறலாம்.

ஒரு கதை நாடக வடிவில் எழுதப்படுகிறது; இசை வடிவில் கீர்த்தனை, சிந்து, தரு முதலிய வகை

களில் அமைக்கப்படுகிறது; இடையிடையே விருத்தம், வெண்பா, கலித்துறை, ஆசிரியப்பா, தாழிசை போன்ற தமிழ்ப்பாவகைகளும் திபதை, கந்தபத்யம், அர்த்த சந்திரிகை, சுலோகம் போன்ற பிறமொழிப் பாநடைகளும் சேர்க்கப்படுகின்றன. இவ்வாறு முழுமை பெறுவதே தமிழில் உள்ள இசை நாடகங்களின் அமைப்பாகும். கதைத் தொடர்பிற்காக (continuty) இடையிடையே உரைநடை வசனங்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எனவே இவை 'இசை இலக்கியங்களே' என்று கூறுவது மிகையாகாது.

**நாடகமும் கூத்தும்**

வடமொழியில் 'நாட்யம்' என்னும் சொல் நாடகத்தைக் குறிக்கும். ஆனால் தமிழில் 'நாட்டியம்' என்னும் சொல்லை நடனத்தைக் குறிப்பதற்கே பயன்படுத்துகிறோம். தென்னிந்தியாவில் நாடகங்கள் அனைத்தும் இசை, நடனம் ஆகியவற்றுடன் சேர்ந்தே நடைபெற்று வந்திருக்கின்றன. 'கூத்து' என்ற பெயர் நடனம், நாடகம் ஆகிய இரண்டிற்குமே பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. இந்த கூத்து ஒரு கதையைத் தழுவியதாக அமைந்தால் 'நாடகம்' என்று கூறப்பட்டது.

சிலப்பதிகாரம் கூறும் கூத்துக்களில் ஒன்று 'சாந்திக்கூத்து' என்பதாகும். அது :

1. சொக்கக்கூத்து (அல்லது) சுத்த நிருத்தம்
2. மெய்க்கூத்து
3. அவிநயக்கூத்து (அல்லது) பாடும்பாட்டிற் கேற்ப அவிநயம் பிடித்தல்
4. நாடகக் கூத்து (அல்லது) கதை தழுவிய கூத்து

என நான்கு வகையாகப் பிரித்துக் கூறப்படுகிறது. எனவே கதை தழுவிய கூத்தே நாடகக் கூத்து என்

னும் வழக்கு சிலப்பதிகாரத்தாலும் அறியப்படுவ தொன்ருகும்.

**இசைநாடகம் :**

இந்த நாடகங்கள் இசையும் நடனமும் இன்றி நடிக்கப்படுவதில்லை. ஆனுல் இருபதாம் நூற்ருண்டில் 'சமூகக் கதைகள்' நாடகத்தில் பங்குபெறத் தொடங்கியபிறகு, பாடல்களும், செய்யுள்களும் இல்லாமல் நாடகங்கள் முழுமையும் உரைநடையிலேயே எழுதப் பெற்றன. இசை, நடனம் போல்வன இல்லாமல் ரியலிசத்தை (Realism) முதன்மையாகக் கொண்டே நடிக்கப்பட்டன. இவ்வகை நாடகங்கள் பெருகிய பின்பு, இசைப் பாக்களையும் செய்யுள்களையும் கொண்டு எழுதப்பெற்ற பழைய தமிழ் நாடகங்கள் 'இசை நாடகங்கள்' என்ற பெயரால் அழைக்கப் பெற்றன.

**நாட்டிய நாடகம் :**

நடன ஆசிரியர்கள், இவ்வகை இசை நாடகங்களுக்கு, ஜதிகளைச் சேர்த்து நடனமாக ஆடுவதற்கு ஏற்றவாறு திருத்தி அமைத்தார்கள். இவ்வாறு திருத்தி அமைக்கப் பெற்ற இசை நாடகங்களே 'நாட்டிய நாடகம்' என்று பெயர் பெற்றன.

**நாடகம் :**

இவ்வாறு இசை, நடனம் போன்றவை இல்லாமல் உரையாடல்களை மட்டுமே கொண்ட உரை நாடகங்களே 'நாடகங்கள்' என்று வழங்கலாயின.

"ஆதிகாலத்தில் தமிழ் நாடகங்கள் எல்லாம் பாட்டுக்களாகவே இருந்தன எனக் கூறலாம். ஒருவாறு தற்காலத்தைக் கருதுமிடத்து பழைய கிரந்தங்களாகிய ராம நாடகம், பாரத விலாசம் என்னும் புத்தகங்களில் வசனமே இல்லாதிருப்பது இங்கு கவனிக்கத் தக்கது.".

"1893 ஆம் வருஷத்தில்தான் முதல் முதல் பாட்டுகளின்றி வெறும் வசன நடையில் தமிழ் நாடகமானது எழுதப்பட்டது என்பது எல்லோரும் ஒப்புக் கொள்ள வேண்டியதே."

என்பன, நாடகக் கலைச் செம்மல் திரு பம்பல் சம்பந்த முதலியார் அவர்களால் தம், 'நாடகத் தமிழ்' என்னும் நூலில் கூறப்படுவனவாகும்.

இவற்றால், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பு இருந்த தமிழ் நாடகங்கள் அனைத்தும் இசை நாடகங்களே என்பதும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே அவை, நாடகம், இசை நாடகம், நாட்டிய நாடகம் என மூன்று வகையாக வகுக்கப்பட்டன என்பதும் பெறப்படுகின்ற செய்திகளாகும்.

## யட்ச கானம்

**பெயர்க் காரணம் :**

> "மைசூர் முதலான கருநாடகப் பகுதியிலே நடைபெற்று வரும் நாட்டிய நாடகம்; நாடோடி நடன வகையைச் சேர்ந்தது. இருந்தாலும் அது தமிழ் நாட்டிலும் கேரளத்திலும் உள்ள சீரிய நாட்டியக்கலை மரபுகளைப் பின்பற்ற முயன்றுள்ளது."
>
> — கலைக் களஞ்சியம்.

"யட்சர், கந்தருவர் என்போர் தேவசாதியினர் என்பது வேதம். அந்த யட்சர் பாடிய பாடல் 'யட்சகானம்' எனப்பட்டதா?

'யட்ச' என்ற பெயர் ஜைன மரபிலும் உண்டு; அவர்கள் பாடியதா?

கிராம மக்கள் தம் கிராம தேவதைகளாக யட்சா (ஆண்), யட்சி (பெண்)யர்களைப் பூசை செய்வர். அப்பூசைக்காக அவர்கள் பாடியதா?

இனிமையான பாடல்களைக் 'கந்தருவ கானம்' என்று கூறுவது போல, யட்சகானம் என்பதும் பாட்டுக்களில் ஒருவகையான பாட்டா?''

என்பன போன்ற விஞக்களை எழுப்பி, கன்னடத்தில் 'ஒருவரே வந்து பாடுவது' எனற பொருளில் 'யக்கல காஞ' என்ற பெயர் வழங்கி வந்திருக்கிறது என்று 'சிவராம காரந்தா' என்னும கன்னடப் புலவர் தாம எழுதிய 'யட்சகான பயலாட' என்னும் நூலில் விடையும கூறுகிருர்.

யட்சகான இலக்கியங்களைத் தெலுங்கு மொழியில் 'ஜக்குல பாட' என்றே வழங்கி வந்தனர். ஆந்திர நாட்டிலுள்ள 'அகோபில க்ஷேத்திரம்' எனனும் பகுதிகளில் வாழும் மலைவாழ் மக்கள் ஜக்கு' என்றே அழைக்கப் டுகின்றனர். அவர்களை யகூர் வகுப்பினர் என்பர். அந்த 'ஜக்குலர்' பாடும் பாட்டு என்ற பொருளில் யட்சகானத்தை 'ஜக்குல பாட' என்று வழங்கினர். பிறகு வடமொழித திரிபால் யட்சகானம் என்ருயிற்று.

சலுவ நரசிம்மய்யா காலத்தில் (கி.பி. 1487-1497) இருந்த 'ரங்கண்ண' என்பவர் 'சௌபாரி சரித்திரம்' என்னும் யட்சகானத்தை 'ஜக்குல பாட' என்ற பெயரிலேயே எழுதியிருக்கிருர்.

''நாராயணன் மீதுள்ள இலக்குமியின் காதலைப் பாடிக் கொண்டு ஜக்கினி வந்தாள்'' என்று ஸ்ரீநாதா என்னும் தெலுங்குக்கவி 'கிரீடாபி ராமா' எனனும் வீதி நாடகத்தில் கூறுகிருர்.

ஆந்திர நாட்டில் நடனம் ஆடும் பெண்கள் யட்சர்கள் போன்று வேடமணிந்து, அரசவைகளிலும் விழாக் காலங்களில் கோயில்களிலும் பாடியாடி வருவதுண்டு. அவர்கள் யட்ச வேடத்துடன் பாடுவதற்காக எழுதப்பட்ட நூல்கள் 'யட்சகானப்' என்று பெயர் பெற்றன. இவ்வாறு பலவகையான கருத்துக்கள் நிலவியிருக்கின்றன.

**முதல் யட்சகானம்:**

பதினோராம் நூற்றாண்டில் 'நந்நய்யா' என்பவர் காலத்தில், ஆடலுக்காகவே எழுதப்பட்ட பாட்டுடன் கூடிய இலக்கியமாகிய 'கருடாசல யட்சகானம்' என்பதே முதல் யட்சகான நூல் என்பர்.

**யட்சகான வளர்ச்சி:**

நடன 'இசைப் பாடலாக' இருந்த யட்சகானம் பதினைந்தாம் நூற்றாண்டு முதல் 'இசை நாடக'மாக வளர்ச்சியடைந்தது. ஒரு கதையானது, இசைப் பாடல்களாலும் செய்யுட்களாலும் இடை யிடையே உரைநடையுடன் கூடிய நாடக இலக்கியமாக உருவாக்கப்பட்டது.

இசைப் பாடல், செய்யுள், உரைநடை ஆகியவை கூடிய இந்த நடையிலேயே யட்சகான நாடகங்கள் இயற்றப்பட வேண்டும் என்று 'சித்திரகவி பெத்தண்ணு' என்னும் அறிஞர் பதினாரும் நூற்றாண்டிலேயே இலக்கணம் வகுத்திருக்கிறார்.

கிருஷ்ணதேவராயர் காலத்து வாழ்ந்த 'கந்துகூரி ருத்ரிகவி' என்பவர் 1570ல் 'சுக்கிரீவ விஜய யட்சகானம்' என்னும் நூலை எழுதியுள்ளார். அதன் பிறகு தெலுங்கு மொழியில் பல யட்சகானங்கள் தோன்றியுள்ளன. தஞ்சை, மதுரை நாயக்கர்கள் காலத்திலும் தமிழ் நாட்டில் பல தெலுங்கு யட்சகானங்கள் தோன்றி புகழ்பெற்று விளங்கின. இன்றும்

தஞ்சை, சரசுவதி மகால் நூலகத்தில் தெலுங்கு மொழியில் எழுதப்பட்ட யட்சகானங்கள் பல அச்சாகாத நிலையில் சுவடிகளாக உள்ளன.

கர்நாடக இசையின் தலைசிறந்த பாடலாசிரியர் திரு. தியாகய்யர் அவர்கள் 'நௌகா சரித்திரம்', 'பிரகலாத பக்தி விஜயம்' ஆகிய இரண்டு யட்சகான நூல்களைத் தெலுங்கு மொழியில் இயற்றியுள்ளார்கள்.

**தமிழில் யட்சகானம்:**

பதினாறு, பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் தெலுங்கு மொழியில் எழுதப்பட்ட யட்சகானங்கள் மிகப்பலவாக வளர்ச்சியுற்றன. அவை தமிழ் நாட்டிலும் புகழ் பெற்று விளங்கியதால் 'யட்சகானம்' என்னும் பெயரிலேயே தமிழ் மொழியிலும் நாடகங்கள் இயற்றப்பட்டன. தெலுங்கில் இருந்த யட்சகானங்களைப் போலவே தரு, கீர்த்தனை, கந்தபத்யம், திபதை, அர்த்த சந்திரிகை போன்ற பாடல் வகைகளையும் பிறவாகிய வெண்பா, ஆசிரியப்பா, கலித்துறை, தாழிசை, விருத்தம் போன்ற செய்யுள் வகைகளையும் கொண்டதாகத் தமிழிலும் எழுதப்பட்டன.

தமிழ் நாடகக் கலை 'தெருக் கூத்து' என்ற பெயரால் இழிந்த நிலையை அடைநதமையால் நாடக ஆசிரியர்கள், யட்சகானம், கீர்ததனை என்ற பெயர்களாக மாற்றியமைத்தனர் என்றே கொள்ளலாம். இந்த அடிப்படையில், தெலுங்கு யட்சகானங்கள் சிறப்புற்றிருந்த காலமாகிய தஞ்சை நாயக்க மன்னர் காலத்திலிருந்தே தமிழில் யட்சகானங்கள் தோன்றிய காலம் எனலாம்.

தமிழ் மொழியில் ஐந்து யட்சகான நூல்களே கிடைத்துள்ளதாகத் தெரிகிறது. இவற்றுள் ஒன்றும் அச்சாகியுள்ளதாகத் தெரியவில்லை.

1. நீலி யட்சகானம். 2. சாரங்கதரயட்சகானம் 3. வல்லாளராச யட்சகானம். 4. சிறுத்தொண்டர் யட்சகானம். 5. நரசிங்க விஜய யட்சகானம் என்ற பெயர்களில் காணப்படும் ஐந்து சுவடிகளும் சென்னை, அரசினர் சுவடி நூலகத்தில் (Govt. Oriental Manuscripts Library) காணப்படுகின்றன.

**தமிழ் யட்சகான அமைப்பு:**

தமிழ் யட்சகானங்கள் — இசைப் பாடல்கள், செய்யுட்கள் வசனம் ஆகிய மூன்று உறுப்புகளால் அமைந்துள்ளன. நாடகத்தில் உரையாடல்களும் பாடல்களினாலேயே நடைபெறுகின்றன.

"எம்மைக் கேட்கும் பொருளதனை யினிக்
கேளுமையா
எவரென்ன கேட்டிடினும் ஈய்ந்திடுவேன்
இவ்விரதம்
தவறாமல் தந்திடுவேன் தான்கேளும் ஐயா!"

இது வல்லாள ராசனின் வினா; சம்பை தாளத்தில் எழுதப்பட்ட பாடல்.

"கீர்த்தியாகிய பார்த்திபாவினி
கிளர் விரகமும் தீரவின்றைய
இராத்திரிக்கொரு வேசிமாதரை - நல்குவாயே"

இது குமார சங்கமரின் வேண்டுகோள். திரிபுடையில் எழுதப்பட்ட இசைப் பாடல்.

தமிழ் யட்சகானங்களில் பாடலுக்குரிய பண்ணின் பெயரைக் குறிப்பிடாமல் தாளத்தின் பெயர் மட்டுமே கொடுக்கப் பட்டுள்ளது. பண்கள் அமைத்துப் பாடுவதை அந்தந்த நாடகக் கலைஞர்களின் விருப்பத்திற்கும திறமைக்கும கற்பனைக்கும் ஏற்ப அமைத்துக் கொள்ளுமாறு விட்டுவிட்டனர் போலும். ஆனால்

தாளம் மட்டும் இதுதான் இருக்கவேண்டும் என்று நிர்ணயித்து இருக்கின்றனர்.

**மொழி நடை :**

மொழி நடையோ மிகத் தாழ்ந்த நடையாகவோ நல்ல செந்தமிழ் நடையாகவோ இல்லாமல் யாவரும் விளங்கிக் கொள்ளும் வகையில் எளிமையாக அமைந்துள்ளது. நடை முதலாகப் பலவகைகளில் ஆய்ந்து நோக்க, சிறு பிரபந்தங்களில் ஒன்றாகக் கொள்ளப்படும் குறவஞ்சி நாடகங்களுக்குப் பிறகே யட்சகான நாடகங்கள் தோன்றியிருக்கக் கூடும் என்று துணியலாம்.

**பெயர் :**

"சிறுத்தொண்டன் முன்பெற்ற செல்வனை வாளால்
அறுத்துச் சுவைக்கறி யாக்கி ஈசருக்கு
உதவியே மோட்சத்தில் உற்றிடும இனிய
கதைதனை யட்ச கானம தாக
உளங்களி கூர்ந்துநான் உரைசெய்கு வேனே"
(சிறுத்தொண்டர் யட்சகானம்-முதல் திபதை)

"உயர்சிந்தா மணியென உதவும்
தான சாரங்க தரன் கதை
யட்சகானப் பிரபந்த கவிதைசொல்லு வேனே"
(சாரங்கதர யட்சகானம்-முதல் திபதை)

"நீலி கதையட்ச கானவிய லாய் நினைத்து
சொல்லத் திருவலத்தில் விளங்கிய சூலபாணி
சுதன்விநாயகர் துணையுண் டாமே"

(நீலி யட்சகானம் – பா. 2)

"இசையிராக மறிந்த பாவல ரசைவிஞலே
நரசிங்க விசயந்தனை அஷ்டகானமாக
விளம்புவேன்"

(நரசிங்கவிசய யட்சகானம்)

"நண்ணுற வேயட்ச கானமாய் நாவில்
நினைத்திட முத்தியை நேசமோ டளித்து"

(வல்லாள யட்சகானம் - பா. 2)

என்பன போன்ற அடிகள், தமிழிலும் யட்சகானம் என்ற சொல்லைத் தம நாடகங்களுக்குப் பெயராக நூலாசிரியர்களே கூறியுள்ளனர் எனபதை எடுத்துக் காட்டுகின்றன.

## வல்லாளராசன் யட்சகானம்

**நாடகத் தொடக்கம:**

'எந்தையாம் அருணைஈசன்
இனியவல் லாளஞர்க்கு
மைந்தனுய் வந்துதித்த
வளமைசேர் கதையைக் கூற"

தந்திமா முகனையும் கந்தனையும் வணங்கித் தொடங்குகிறது நாடகம். அடுத்து,

ஆதியாகிய அருணைகிரி; திருமாலும் மலரயனும் தேடி முன்னறியாத அருணசலேசர்; அண்ணமலை தனின் உண்ணு முலையாள் ஆகியோர் பெருமைகளைக் கூறி வணங்குகிருர் ஆசிரியர்.

**வல்லாளன்:**

திருவருணையில் இருந்து அவனது அவனியை ஆண்டு வருகிருன் வல்லாள பூபதி. மன்னர்கள் யாவரும புகழுமாறு அரசோச்சுகிருன. அண்டர் நாயகனும் இறைவனின் அன்பனுகி, சங்கமர் வேதியர்

போன்ருரை நாள்தோறும் வணங்கி மகிழ்ச்சியோடு வாழ்கிருன் மன்னவன்.

**அரசியர் இருவர்:**

"சதிருப வதியெனும் 'சல்லமா தேவி'

மதிவத னத்திஞள் 'மல்லமா தேவி' ஆகிய இருவரை மணந்து, கருணையுடன் அருள் புரிந்து அறம் விளங்க அரசு புரிகிருன் வல்லாளன்.

**குறையும் நிறைவும்:**

செல்வம் அனைத்தும் பெற்ற மன்னவனுக்கு 'மக்கட் செல்வ'மில்லாத பெருங்குறை ஏற்பட்டு விட்டது. அருணசலேசரை நாள்தோறும் வழிபட்டு,

"அண்ணலார் திருவடிக் கன்புசேர் தொண்டர்
என்றுகொண் டெவரேனும் ஏதுகேட் டிடினும்
கொடுப்பது"

என்ற முடிவுக்கு வருகிருன் மன்னவன்.

'கேட்டபொருள் அளித்தபேர் உலகினில் யாருமில்லை' என்ருலும் "இந்நாளில் அருணேசர் ஈசர்திரு வுளச் செயலே மன்ஞ உன் மனக்கருத்தில் வந்துரைத்த தாகும்" எனவே "ஈசனரு ளாலிதற்கு இடையூறு வருவதில்லை, நேசமாய் முடிந்தேறும் நினைத்த கருத்து" என்று கூறி துணை நிற்கிருன் "நீதி அமைச்சன்"

புவியறிய, தானக் கொடி கட்டுகிருன் மன்னவன் தம் தேவியருக்கும் செய்தி யறிவித்து, தன் விரதம் வெற்றிபெற இசைந்து நடந்து கொள்ளுமாறு வேண்டு கிருன். அவ்வாறே எல்லா அறங்களும் நடைபெற்று வருகின்றன.

**நாரதரும் அருணாசலேசரும்:**

அருணாசலேசர் உமையுடன் வீற்றிருக்கிறார்; நாரதர் வருகிறார்.

"மூவுலகுஞ் சஞ்சரிக்கும் முனியே இக்குவலயத்தில் ஏது செயல்? புதுமை யேது? இயம்புவீர்" என்று வினவுகிறார் இறைவன். வல்லாளன் பூண்டிருக்கும் விரதத்தினை எடுத்துக் கூறுகிறார் நாரதர்.

**அருணாசலேசரும் அளகைவாசரும்:**

வல்லாளனின் அன்பினைச் சோதிக்க எண்ணுகிறார் இறைவன். தன்னுடன் பூலோகத்திற்கு வருமாறு குபேரனை அழைக்கிறார். அரிவையர் ஆசையுறும் பலவகைப் பொருள்களையும் கைக்கொண்டு குபேரனும் இறைவனுடன் புறப்படுகிறார். இறைவன் குமார சங்கமராகவும் குபேரன் சிறிய சங்கமராகவும் வேடம் பூண்டு அருணை நகர் வருகிறார்கள். தெருக்களை எல்லாம் கடந்து வேசியர் வீதியில் பாடிக் கொண்டு வருகிறார்கள்.

**சங்கமரும் பாவையரும்-**

இமையவரை மயல் செய்யும் இருள்கொண்ட குழல் மாதர், சங்கமர் பாடலின் இனிமையில் மயங்கி மருள் கொள்ளுகின்றனர். சங்கமரைக் கண்ட கண் இமையாது நிற்கின்றனர். வேசியரிடையே காம சாஸ்திரம் பற்றி உரையாடிய சங்கமர், அவர்களுக்குரிய பணயமும் வரிசையும் வினவி, அவர்கள் கூறிய பொன்னும் பிற வரிசைப் பொருள்களும் கொடுத்து ஆயிரம் வேசியர் இல்லத்திலும் ஆயிரம் சங்கமராக இருக்க மாய்கை செய்து அனுப்பி வைத்துவிட்டு, வல்லாள மன்னனிடம் வருகிறார்.

குமார சங்கமரும் வல்லாளனும்:

தம் வருகையை வல்லாளனுக்கு அறிவிக்கிறார் குமார சங்கமர்.

"தற்பரனைப் போலவே தானிங்கு வந்தீர்
அத்தனே வந்துஎன் அரியணையின் மீதிருந்து
சித்தமுற வந்தசெயல் செப்பிடுவீர்"

என்று பணிகிறான் மன்னவன்.

"நின்புகழைக் கேட்டே நெடுநாள் வழிநடந்து
அப்பனே இன்றுநாம் அடைந்தோம்
உம்மனையே"

என்று தொடங்கிய குமார சங்கமர்,

"உரைத்திடு வோம்நம் ஊரினும் பேரும்
உத்தரம் அதனிலே உயர்ந்த தூரத்தில்
வெத்தியா கியதொரு வெள்ளியாம் தீப்பை
எந்தெந்த நாளைக்கும் இருப்பிடம் அதுநாம்
தந்தையில் லாத தனியொரு பேதை
பாத்திரங் கொண்டுநாம் பலியிரந் துண்போம்
கொண்டபெண் ஒருத்திநல் கூத்திபெண்
ஒருத்தி"

என்பன போன்றகூற்றுக்களால் தன் வரலாற்றினையும்

"மேதினி தனிலுள வேசியர்க் கெல்லாம்
காம நூல்களும் கலவிலட் சணமும்
தாமறி வித்திடும் தன்பயன் அறுவென
ஆடகக் களஞ்சியம் ஆனதோர் நண்பன்"

என்பவற்றால் குபேரனின் வரலாற்றினையும் மறை பொருளாகச் சொல்லி, இன்றைய வரைக்கும் எனக் கொரு குறையுமில்லை,

"மனங்களித்திடும் மாதரின்பமே மனதுக்கின்பம்,
கிளர்விரகமும் தீரஇன்றைய
இராத்திரிக்கொரு வேசிமாதரை-நல்குவாயே"
என்று கேட்கிறார்.

"அய்யனே ஏதிது அதிசய மாச்சுது"?
"சொர்ணமும் ரதகெச துரகமும் அவனியும்
இன்னவை தன்னிலும் இதுவோ பெரிது?"
"மருள்காட்டிக் காமுகரை வலிதழிக்கும்
விலைமாதர்

வரக்காட்டும் என்னவே வாய்திறந்து கேட்டீர்" என்பன போன்ற வார்த்தைகளால் சிறிது மனம் வெறுத்தவன் போலப் பேசிய வல்லாளனைத் தடுத்து

வல்லாளா!

"மாதர்கள் இன்பத்தை மனதில் இச்சையதாய்
நீதருவாய் என்று நினைந்துவந் தோம்நாம்"

"இல்லைஉண் டென்பது இரண்டினில் ஒன்று
சொல்லினால் வரும்வழி தொடங்கிஏ கிடுவோம்"
என்று சினந்து கூறுகிறார் குமார சங்கமர்.

குற்றம் பொறுக்குமாறு வேண்டிக் கொண்ட வல்லாளன் சங்கமர் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்து தங்கச் செய்கிறான்.

விலைமாதர் வேட்டை:

"முன் பணயம் வாங்கிஒரு அன்பருடன் இல்லாத
தன் பருவ வேசியரை" உடனே அழைத்து வாருங்கள் என்று தூதுவரை அனுப்புகிறான் வல்லாளன். வேசிமார் மனை ஆயிரங்களும் விரைந்து பார்த்த தூதுவர், மன்னனிடம் வந்து 'ஒண்டியாய் ஒருவேசி யாரையும் கண்டிலோம்' என்று கூறிவிடு கின்றனர்.

**அமைச்சரும் விலைமாதரும்:**

இச் செய்தியறிந்து வருத்தத்தோடிருந்த மன்னனைக் கண்ட அமைச்சன், தான் அழைத்து வருவதாகக் கூறிச் செல்லுகிறன்.

"இரவினுக் காயிரம் எவர்களும் தந்தால்
பரிவுடன் நாம்பதி ஞயிரம் தருவோம்
இதுவல்லால் வரிசைகள் எத்தனை பெறலாம்"

என்று கிளிமொழி மாதராம் விலைமாதரைக் கெஞ்சுகிறன் அமைச்சன்.

"என் செய்வோம் பணயங்கள் யாவரும்
கொண்டோம்
அஞ்சுவோம் இத்தினம் அமளியில் வந்த
நாயகன் தனைவிட கமக்கடுக் காது"

"இத்தினம் கழிந்திடில் யாவரும் நாளை
அத்தினம் தேவரீர் அருள்படி செய்வோம்"

என்று விலைமாதர் அனைவரும் மிகமிக இரக்கத்தோடும் வணக்கத்தோடும கூறிவிடுகின்றனர்.

**மன்னரும் விலைமாதரும்:**

செய்தியறிந்த மன்னவன், தானே பரிமீதில் ஏறிச் செல்லுகிறன்; அமைச்சரையும் உடன் அழைத்துச் செல்லுகிறன்; தெருத் தெருவாகச் செல்லுகிறன்.

"என்—பேச்சுரை தப்பாதிருக்கப் பிரியமுடன் வந்தவர்க்கு இராச்சிய மெல்லாமளித்து விடுவேன்" என்று கூறி விலைமாதரை வேண்டுகிறன்.

"அப்பொழுது அரிவையர் அதிர்ந்துமெய் நடுங்கி
கால் நடுங்கிக் கரம்கட்டி வாய்புதைத்து"
"தேவரீர்க் கடிமையாம் திருவருள் படிக்கு
ஏவிய தொழிலினுக் கிசைவதே அல்லால்
மாற்றுவே றுளதோ? ஆனல்

எங்கள் எல்லார் மனையிலும் முன்னமே பொருள் ஈந்த நாயகர் இருக்கின்றனரே! சங்கமர், முன்னமே பொருள் பெற்ற பெண்டிராக இருக்கக் கூடாது என்று கூறியிருக்கிறார் என்கிறீர்கள். நாங்கள் வேறு என்ன செய்வது?'' என்று கூறுகிறார்கள்.

மீண்டும் நான்கு திசையிலும் ஆள் அனுப்பியும் விலைமாதர் கிடைக்காமல் வருந்துகிறான் மன்னவன்.

**மன்னவரின் வருத்தம்:**

இருள் பரவுகிறது;; சித்தாண்டி வந்து, குமார சங்கமர் எப்போது வரவேண்டும்? எங்கே வர வேண்டும்? என்று கேட்டுவரச் சொன்னதாகக் கூறு கிறான். மனம் கலங்கி யிருந்த மன்னவன, 'அரை நாழிகைதனிலே வந்து அழைத்து வருவேன' என்று கூறி, சித்தாண்டியைய அனுபபிவைக்கிறான்.

> 'சங்கமருக்கு இல்லையென்ற உரைசொல்லுவதிலும் உயிர்தனைத் துறந்திடுவது நல்லது; ஆனால் அவ் வாறு இறப்பதும் தனமையில்லை; தவம அழிந்து விடும்' என்றெல்லாம் எண்ணி, எண்ணி ஏங்கிய வல்லாளன் தன் அரண்மனைக்குச் செல்லுகிறான்.

**மன்னவரும் தேவியரும்:**

என்றுமில்லாத துயரத்துடன் இருக்கின்ற மன்ன ரைக் கண்ட தேவியர் இருவரும், துயருறுவதன் காரணம் கேட்கின்றனர். நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுகிறான் வல்லாளன்.

> ''தெரிவையர் இருவரும் சிந்தைதான் கலங்கி
> ஏதுசெய் வோமென எண்ணுது மெண்ணி''

சொன்ன சொல் தவறாமல் காக்க, மன்னர் பலரும் செய்த அருஞ்செயல்கள் பலவற்றை எடுத்துக் கூறு கின்றனர். மேலும்,

“தாரத்தை விற்கவும் தான்மீட் டிடவும்
நேரத்தால் ஆக்கினை நிமிஷத்தில் இடவும்
ஆளரா னவருக்கு யாவையுஞ் சொல்லி”

“சஞ்சலந் தனைவிட்டுச் சங்கமர் தன்னை

இன்சொலால் அழைத்திட ஏகுமின்” என்கின்றனர்.

கேட்ட மன்னவன்,

“சொல்லாத சொல்தனக்கு தோகைநீர் மனமிரங்கி
தள்ளாமல் இசைந்ததென் தவமகிமை தானே!”

“செய்யாத காரியத்தைச் செயச்சொல்லும்
என் வார்த்தை
பொய்யாமல் போற்றுமுங்கள் பொறுமையென்ன
சொல்வேன்”

என்றெல்லாம் தேவியரைப் புகழ்ந்து, குமார சங்கமரை அழைக்கச் செல்லுகிருன்.

**சங்கமரை அழைத்தல் :**

விரைந்து சென்ற மன்னவன்,
“மரித்த உயிரது வந்தது என்னவே

கனத்த மகிழ்வுடன்” சங்கமரை அரண்மனைக்கு வருமாறு அழைக்கிருன்.

“இந்நேர மானபின் எனையழைக்க வந்தாய்உன்
பின்னே நடந்துமனை புகுத விடிவாகும்”

“பின்னேர மாகிவிடில் பெருந்தூக்க மயக்கம்”– இனி வந்து என்ன பயன் என்றெல்லாம் கூறி சினந்து கொள்ளுகிருர் சங்கமர். மிக விரைந்து அழைத்துச் செல்லுவதாக மிகவும் பணிந்து வேண்டி அழைத்துச் செல்லுகிருன் அரசன். முன்பே பலவகையிலும் அழகு

பட அலங்கரித்திருந்த மஞ்சத்தின்மீது அமர்த்தித் தன் தேவியரிடம் செல்லுகிருன்.

**சல்லமாதேவியின் இசைவு :**

தன் தேவியரிடத்துச் சென்று

"இருவரில் ஒருவர்நீ ரிசைந்து சங்கமரை
மருவியே அவர்மயல் தணிந்திட"ச்செய்குவீர்
என்று வேண்டுகிருன். இளைய தேவியாகிய
"மல்லமா தேவியும் மன்னனை வணங்கி
தேவரீர் சொன்ன சொற்படியே
இருந்துநான் புகழும் எய்திட வருவேன்" விடை தாருங்கள் என்கிருள்.

"காவல! சிறியமாது இவளும்
மனக்கருத் தானதும் அறிந்தவள் அல்ல
தகவினல் ஏதொரு தப்புவந் திடுமோ?
என்று ஐயுற்றுக் கூறிய சல்லமாதேவி
"அடியவள் ஏகியே அவர்தனைப் புல்கி
வடிவுள சங்கமர் மனங்களித் திடவே"
செய்குவேன் என்று கூறி விடைபெற்றுச் செல்லுகிருள்.

**சல்லமாதேவியும் குமார சங்கமரும் :**

பலவகையிலும் அழகுவிளங்க அணிசெய்து கொண்டு செல்லுகிருள் சல்லமா தேவி. குமார சங்கமர் அவளைக் காணுதது போல மவுனமாகப் படுத்து இருக்கிருர்.

"மோருக்கு வந்தவர் மொந்தையை ஒளித்திடில்
யாருக்கு சேதம் அறிந்து சொல்வீரே!"

"கரும்பினைத் தேடியே கண்டத்தை வாங்கினல்
அருந்திடில் அல்லவோ அதன்ருசி தெரியும்"

"கும்ப கர்ணனுக்குக் குறுக்கே பிறந்தவர்
போலே தெரியுது!"

என்பன போன்ற பேச்சுக்களாலும், பலவகையான பாடல்களைப் பாடியும் பலவகையில் குமார சங்கமரை எழுப்பிப் பார்க்கிருள் சல்லமா தேவி. அவரோ எழுந்தாரில்லை. வலிய சங்கமரைத் தழுவித் தன் மார்பின்மீது வாரி அணைத்துக் கொள்ளுகிருள் தேவி.

**சல்லமாதேவியும் குழந்தையும்:**

அணைத்த மாத்திரத்தில் தந்தையும் தாயுமாகி நின்ற தற்பரனும் அருணேசர், சல்லமா தேவிதன் பூண்முலை மார்பின்மீது குழந்தையாக விளங்குகிருர். சல்லமாதேவி நடுக்கமுற்றவளாய் அரசனை யழைக்க, அரசன் கண்டு அதிசயித்து

"அருணுச லேசர் என்னை ஆட்கொள்ள வேண்டியோ" சங்கமராய் வந்தார்? என்று கூறி மகிழ்ந்து அமைச்சர், புலவர் முதலான அனைவரையும் அழைத்து விழா எடுக்கிருன்.

"தேவர் மாதவர் முனிவர் கடவுளர்
தீண்ட வரிதான சோதி மேனியைப்
பாவை சல்லமா தேவி கரத்தினில், தாவி

யெடுத்து, மடியில் வளர்த்தி,

"ஆதி அரவத்தின் நஞ்சை அமுதாய்
அருந்தி தேவரைக் காத்த விமலர்க்கு, எண்

ணெய் புகட்டி, மையெழுதி, நிலப்பொட்டணிந்து சீராட்டும் பெரும் பேற்றினைப் பெறுகிருள்.
மக்கள் யாவரும் கண்டு,

"சல்லமா தேவிக்குச் சங்கர ஞர்ஒரு
பிள்ளையானது புதுமை" என்று கூறி

வாழ்த்துகிருர்கள். அடி முடி காண்கிலான் மலை வடிவானவன், வல்லாள மன்னருக்குப் பிள்ளையாய்த் தோன்றினுன் என்று கூறி வாழ்த்துகிருர்கள்.

**இறைவனும் அருள்புரிதல்:**

சிறிது நேரத்தில்,

"வெள்ளிமால் நிகரெனும் விடைமிசை ஏறி
துள்ளி மான் மழுவும் சூலமும் ஏந்தி
நீறணி மேனியன நிறைமகிழ் வுடனே
வீறுடன் அரசன்முன் விளங்கி நின்றனர்"

அக்காட்சியினைக் கண்ணுற்ற வல்லாளனும் தேவியரும் வலம்வந்து, அடியேம்

"செய்தவம் சிறிதெனினும் செகத்திலெமைப் பெரிதாக
அய்யனே ஆட்கொண்டு ஆண்டுகொண் டீரே"

என்று போற்றி வணங்குகிறார்கள்.

"விரதமே அழிந்திடா விதமது குறித்து
சரசமே செயவரும் சல்லமா தேவிதன்
மைந்தனாய்த் தோன்றினம் மன்னனே மனத்துள்
சிந்தனை தீர்த்தனம் செகமெலாம் அறிய
பிள்ளையாய்ப் பிறந்துநாம் பெரும்புகழ் அளித்தோம்"

என்று உலகறிய கூறிய இறைவன்

வள்ளலே!

உம்பர்கள் மாதவர் உலகெலாம் அறிய
தந்தைதன் உரிமையும் தாம்செய்வோ மென்றும்

உளம் மகிழ்ந்து வாழ்த்துகிறார்.

**முடிவு:**

இந்நாடகத்தினை அன்புடன் கற்பவர், ஆசையாய்க் கேட்பவர், இன்பமாய் எடுத்து உரைப்பவர், எழுதுபவர் யாவரும் இறைவனருள் பெற்று இடர் நீங்குவர் என்ற வாழ்த்துகளோடும் மங்கள இசையோடும் நாடகம் முடிவு பெறுகிறது.

## நாடகத்தைப் பற்றி

**நகரம் :**

“மணிகொ ழித்திடும் மாட மாளிகை தவழ்சோலை
திணிகொ ளம்பரத் தினையுறு சிறப்பினை யார்ந்த
கணிகை யாமவர் கற்பினை யருந்ததி தனக்கே
இணையெ னச்சொல விசைக்குமா
வருணையம் பதியாம்”

(அருணசலபுராணம்-வல்லாளன் சருக்கம்-2)

“இத்தகை சிறப்பை வகித்திடு நகருக்
கிறைவனும் வல்லாள பூபன்” (ஷ-3)

என்னும் அடிகள், திருவருணையம்பதியில் இருந்து அர சோச்சினன் ‘வல்லாள ராசன்’ என்பதைக் கூறு கின்றன. மேலும்,

“மாசின்றி விளங்கு அருணையம் பதியின்
வல்லாள மன்னன் என்போன்” (ஷ-22)

என்பது நாரதர் கூற்றாக அமைந்துள்ளது.

“அளகையாள் அரசே கேள்நாம்
அருணையம் பதிவாழ் வேந்தன்” (ஷ-17)

என்பது கயிலை நாதனும் இறைவனின் கூற்று. இவை யும் வல்லாளன் இருந்து அரசாண்ட நகரம் திரு வருணையம்பதியே என்பதைக் கூறுகின்றன. இவற் றின் அடிப்படையில்,

“மலர்மகிழ் திருவண்ணு மலைநகர் ஆளும்
சேனைசூழ் வல்லாள தீரன்தன் கீர்த்தி”

(வல். யட்ச. பா. 21)

என்று பாடுகிறது இவ் யட்சகானம்.

"பேர்பெறும் அருணையம் பெரும்பதிதனிலே"-பா. 2.
"திறத்தில்மிகு சோணகிரி சித்திரமணிக்
கோபுரத்தில்"-பா. 3.
"நானிலமெல்லாம் புகழும் நல்லதிரு முன்னல்நகர்"-
பா. 3.
"மன்னும் அண்ணுமலை யாகிய அருணகிரியை"-
வசனம்
போன்ற பல அடிகளின் வாயிலாக அந்நகரத்திற் குரிய பிற பெயர்களும் காணக் கிடக்கின்றன.

ஒப்பிலா கிரியும் எண்ணிலாத் தடங்களும் இயல் மலர் வனங்களும் சோலைகளும் விளங்கும் அழகினை யுடையது திருவருணை மாநகரம்.

"சதுர்மறை ஓசையும் தாழிசை ஒலியும்
விதமுறு துந்துமி மிகுசங்கு ஒலியும்" எப்போதும் ஒலித்துக் கொண்டே யிருக்குமாம்.

வேதியர் வீதிகள், அரசர் வீதி, வணிகர்வாழ் மனைகள், பிறர் வாழும் குடிமனைகள் போன்றவை விளங்கும் அவ்வருணைமாநகரில்,

"வேசியர் விளங்கிய வீடுகள் கோடி" உண்டு என்பதையும் இறுதியாகக் கூறியுள்ளார் ஆசிரியர். பொதுவாக

"அளகைபோல் அழகுடைய அருணைமாநகர்" என்பது அதன் சிறப்பை மேலும் உயர்த்தி நிற்கிறது.

**அண்ணுமலையும் ஆலயமும் :**

இறைவன் அனைத்து உயிர்களுக்கும் அருள்புரிப வன்; அவன் வீற்றிருக்கும் அண்ணுமலையோ

"தரணி தனிலுள மனிதர் ஒருதரம்
அருணை கிரியென மரண பவமற
கருணை யதுபுரி யருணை கிரி"யாகும் என்பது

ஆசிரியர் உள்ளத் துணிபு. மேலும் அம்மலையைப் பற்றி

"விண்டுவுஞ் சதுர்முகனும் வெருவுறக்
கொண்டு முன்பொரக் கண்டு அழலாய்
பண்டு தோன்றியது"

என்று கூறப்படும் செய்தி, அயனுந் திருமாலும் அடி முடி காண நின்ற வடிவத்தின் திரிபே அம்மலை என்பதை உணர்த்துவதோடு

"ஏழு மேகங்களும் பற்பல கோடியாகி எண்ணில்லாத காலம் பனை போன்ற துளிகளைக் கொண்டு ஓயாமற் பெய்தாலும் மலையின் மேல் விழுந்த சலம் சிறிதாயினும் கீழிறங்காது — இது ஒன்றே அண்ணாமலை அக்கினி மலை என்பதற்குச் சான்றாகும்"

(அருணாசல புராணம்-மழவை மகாலிங்க ஐயர்)

என்ற கூற்றுக்குத் துணையாகவும் நிற்கிறது.

அம்மலையில், இறைவன் வீற்றிருக்கும் ஆலயமோ இரத்தினங்கள் பதிக்கப்பட்ட, சித்திரமணி கோபுரத்தை உடையது என்பதை —

"குந்தனம் எழுதிய கோபுரத்தமர்ந்த" — பா. 2.
"திறல்மிகு சோணகிரிச் சித்திரமணிக்
கோபுரத்தில்" — பா. 3.

என்னும் அடிகள் விளக்கி நிற்கின்றன.

இவ்வழகுமிகு ஆலயத்துள் கோயில் கொண்டுள்ள இறைவன் அருணேசர் அருணாசலேசர், அருணைநாதர் என்ற பெயர்களால் அழைக்கப்படுகிறான்.

"திருமாலும் மலரயனும் தேடிமுன் னறியாத
அருணாசலேசர்"
"மங்கையுமைக் கிடபாகம் மகிழ்ந்தளித்த
அருணேசர்" — பா. 6.

"அளந்தாருலகை முன்மாலென்று தானே
அருணாசலனார்
வளர்ந்தார் கிரிவடிவாய் அண்டமுட்டினும்
மாலயனும்
களைந்தும் மறந்தும் மணிமுடி தேடியும்
கண்டறியார்" — பா. 40.

இவ்வடிகள், தானே 'பிரமம்' என்று எண்ணி, பொருத திருமாலும் மலரயனும் உணருமாறு வளர்ந்து நின்ற இறைவனது வடிவமே மலையாய் நின்றது என்ற வரலாற்றைத் தாங்கி நிற்பனவாகும்.

"அருணாசலேசருக்கு அன்புதான் புரியும்
நரபதி வல்லாள ராசன்" என்று ஆசிரியரால் பாராட்டப்படும் வல்லாள மன்னனைப்பற்றி இந்நூலின் ஆங்கில முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ள சில வரலாற்றுச் செய்திகளைத் தவிர,

"வல்லாளன் விசயநகரத்து அரசரில் ஒருவன்"
(அபிதான சிந்தாமணி)

"வல்லாளன் சேரகுலத்தரசன்"—
(அருணாசல புராணம்
மழவை மகாலிங்க ஐயர் உரை)

"தொண்டைமண்டலம் புரந்திடும்
வல்லாளராசனை" — (இந்நூல் பா. 15)

என்பன போன்ற செய்திகளும் காணக் கிடக்கின்றன.

"கொடும்புலியும் பசுவுமொரு குளத்துறையில்
நீர்பருக
விடஅரவும் எலியுமொரு விடத்திருந்து வாழ
பருந்துடனே பசுங்கிளியும் பண்பாக ஒருகூட்டில்
இருந்துகளித் திடமாரி என்னாளும் பொழியும்"

இவை வல்லாளனின் ஆட்சியில் நிகழும் நிகழ்ச்சிகளாம். பகையின்றி வாழும் ஒருமைப்பாட்டினைப் பெரிதும் தம் நோக்கமாகக் கொண்டுள்ள நூலாசிரி

யர், நாட்டில் முறையாக மழை பொழிவதற்கும் அரசியலின் நெறிமுறையே காரணமாகும்; அரசு நெறி தவருது ஒழுகின் இயற்கை துணை செய்யும்; நெறி தவறும் ஆட்சி காலத்தே இயற்கை சதிசெய்யும் என்பன போன்ற கருத்துகளிலும் நம்பிக்கை கொண்டவர் என்பதை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

யார் எது கேட்பினும் ஈவதென விரதம் பூண்ட வல்லாளன், தன் தேவியரிடம் வந்து, தன்விரதத்தை எடுத்துக் கூறி

"இன்றுயான்மனத் தெண்ணி பூண்டது
வெற்றிபெறவே
ஒன்றுநீர் நன்றதால் முடிந்தேற இசைந்துநீர்
நடந்து கொள்வீர்"

என்று, அவர்களையும் தன் விரதத்தில் ஒத்துழைக்குமாறு வேண்டிக் கொள்ளுகிருன். இச் செயல், குமார சங்கமருக்கு அளிக்க வில்லையாதர் இல்லாமல் வருந்துங் காலத்துப் பேருதவியாக நின்று நாடக இயைபை ஏற்படுத்துகிறது.

**நாடகத்திற்கு நாரதன் துணை :**

வல்லாளன் ஆட்சியில் அறச்செயல்கள் நடைபெறுகின்றன. கயிலைக்குச் செல்லுகிருன் நாரதன்; திங்களணி அரனுர், நாரதரை நோக்கி "முக்காலங்களும் அறியும் முனியே இக்குவலயத்தில் புதுமையேது? புகல்க!" என்று வினவுகிருர். நாரதன்,

"அருணைபுரியாளும் வல்லாளன்
வந்தவர் கேட்பது தானளிப் பேனென
ஆணவ முடனே, மாதவ முடனே
விருதுடனேகொடி பரிவுடன் நாட்டினன்"

என்று கூறிச் செல்லுகிருன். நாரதன் கூற்று ஓரிரு வரிகளில் முடிந்து விடுகிறது. ஆனல் இறைவனின்

சோதனைக்கு ஆளாகும் வல்லாளனின் பெருஞ்சிக்க லான காலம் அக்கூற்றுலேயே தொடங்குகிறது.

**மாறுவேட மாண்பு :**

இறைவனுடன் பூலோகத்திற்கு வருகிறான் குபேரன். ஆயிரம் பணப்பைகள்; புடமிட்ட பொன்; ஒளிதரும நவமணிகள்; அழகிய ஆடை, ஆபரணங்கள், இன்பம் தரத்தக்க அணிகலன்கள், கதம்ப கஸ்தூரி, கற்பூரகுங்குமம் போன்ற பலவகையான பொருள்களொடு வருகிறான். இவை அரிவையர் ஆசைகொள்ளும் பொருள்களாம்.

இதனை,

"அகமகிழ்ந்து அரிவையர் ஆசையே எய்தும்
வகையெலாம் கைக்கொண்டு வந்தனன்
குபேரன்"

என்பர் ஆசிரியர்.

இறைவன் குமார சங்கமராகி வரும் வடிவம் மிக மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது.

"சடைதனைக் குங்குமச் சாயலாய் விளங்க
அடர்தரும் பாகையாய் அழகுறப் புனைகிறா"னும் இறைவன். அச்சடையில்

இளம்பிறை தனையலர் என்னவே முடிக்கிறான்; வளம்பெறச் சேடனை வச்சிரக் கடுக்கனாய் அணிகிறான்; மெய்யெலாம் நீறு, கஸ்தூரி திலதம், மார்பினில் சந்தனம் அணிந்த காட்சி; தங்கக் கடகம், செங்கையில் ஆழி, உருத்திராட்ச மாலை, கரியுரியாகிய துகில் தரித்தகோலம்; இவ்வாறு குமார சங்கமராய் வடிவெடுக்கும் இறைவனின தோற்றம் முழுமையாகக் காட்டப்படுகிறது.

குமார சங்கமராய் மன்னனிடம் செல்லுகிறான் இறைவன். மன்னனும் உபசரித்து வேண்டி வந்தது யாது? என வினவுகிறான். தன் விருப்பம் கூறுமுன்,

'கீர்த்தி யாபரணா'! என்று விளிக்கிறார் மன்னனை; விளித்து,

"உத்தரம் அதனிலே உயர்ந்த தூரத்தில்
வெத்தியா கியதொரு வெள்ளியாம் தீப்பை
எந்தெந்த நாளைக்கும் இருப்பிடம் — நாம்
தந்தை இல்லாத தனியொரு பேதை
பாத்திரம் கொண்டுநாம் பலிஇரந்து உண்போம்"

"கொண்டபெண் ஒருத்தி கூத்திபெண் ஒருத்தி" என்பனவாகிய தன் வரலாறுகளைக் கூறுகிறார் சங்கமர்.

அந்த மனைவியருள் மூத்தவள் உலகெலாம் திரிந்து ஈராழி நெல் கொணர்வாளாம். அதையும் வையத்தோர்க்கே வழங்கி விடுவாளாம். மூத்த பிள்ளையோ பெருந்தீனிக் காரனாம்; இளையவனோ கள்ளனாம். எனவே சமுசார வாழ்க்கையை வெறுத்து வந்து விட்டாராம். வரலாறு ஆயினும் வேடிக்கை யாகக் கூறப்படுவது நாடகத்திற்குச் சுவை யூட்டுவ தாக அமைகிறது.

உயர்ந்த பொருள்கள் பலவிருக்க வேசியரைத் தருமாறு கேட்கிறீரே? என்று சிறிது தளருகிறான் மன்னவன். சினமுறுகிறார் சங்கமர்.

"ஆர் துறந்தாரடா அறிவையர் தன்னை?" என்று தொடங்கி,

"சங்கரன் கங்கையைத் தலைமிசைச் சுமந்தான்
செங்கண்மால் உரமிசைத் திருவினைத் தரித்தான்
நான்முகன் வாணியை நாவினில் மறைத்தான்"

இவை மட்டுமா?

முருகன் வள்ளியை வணங்கினுன்;
சந்திரன் குருதாரத்தைச் சேர்ந்தான்;
இந்திரன் அகலிகையை அடைந்தான்;

கவுசிகன் - ஊர்வசி; பராசன் - மீன்வலைப்பெண் - இவை எல்லாம் தன் ஆசைக்கு உறுதுணையாக, சங்கமர் காட்டும் சாட்சியங்கள்.

வேசியருக்காய் அபகீர்த்திக் குள்ளானேன் சோணேசா என்று கூறி வருந்தும் மன்னவன்,

சங்கமர்க்கு இல்லை என்று உரை சொல்வதிலும் உயிர் துறக்கலாம் என எண்ணுகிருன்; இறந்துவிடில் அது தன்மை யில்லை; தவமோ அழியும்; நற்கதியுங் கிடையாது - என்று அறிவுறுத்துகிறது அவன் உள்ளம்: இப்படிப்பட்ட போராட்டங்கள் நாடகத்தின் உச்ச கட்டமாய் நிற்கின்றன.

மன்னன் துயர் கண்டு வருந்தி வினவுகின்றனர் தேவியர் இருவரும்.

"மாற்ருர்கள் படையெடுத்து வந்தார்களோ,
கரத்தை
ஏற்ருர்க்குக் கொடுக்கபொருள் இல்லாமற்
போச்சோ"

என்பன வருத்தத்திற்குரிய காரணங்களாக இருக்க லாமோ என எடுத்துக் காட்டப் பெறுகின்றன. உரிய காரணங்களே.

"செய்யாத தீமைஎன்ன செய்தார்களோ சனங்கள்
பொய்யாத மழைமறுத்துப் பெய்யாமல்
போச்சோ?
குடிபடைகள் மனதுதனில் குறைகள்சில
வந்ததோ
படிமீதில் பயிர் விதைகள் பழுதானதோ தான்?

என்பனவும் காரணங்களாகக் காட்டப் படுகின்றன.

நாட்டில் ஏற்படும் இயற்கை இன்னல்களுக்கும் அஞ்சுகின்ற தேவியரின உள்ளம் இவ்வரிகளில் தெளிவாகத் தெரிவதைக் காணலாம்.

**நாடக மாற்றம்:**

மல்லமாதேவி சங்கமரிடம் செல்ல மன்னனை வணங்கி விடை கேட்பதும்,

"மன்னவ! இவள் சிறிய மாது; உள்ளக்கருத்தும் அறியாதவள்; ஏதேனும் தவறு நேரிடலாம். எனவே

அடியவள் ஏகியே அவர்தனைப் புல்கி
வடிவுள சங்கமர் மனங்களித்திடவே

செய்குவன் என்று சல்லமாதேவி பகர்வதும்

"கரும்பினைத்தேடியே கண்டத்தை வாங்கினால்
அருந்திடில் அல்லவோ அதன்ருசி தெரியும்"

என்று சங்கமரிடம் கெஞ்சுவதும் இறுதியாகச் சங்கமரைக் கைகளால் தழுவி வாரி எடுப்பதுமாகிய செயல்கள் காண்பவர் உள்ளத்தே வெவ்வேறு கருத்துகளைத் தோற்றுவிக்கின்றனவாயினும் நாடகத்திற்குரிய திருப்ப நிகழ்ச்சிகளாவதில் பெரிதும் துணைபுரிகின்றன.

**முடிவு:**

"சல்லமாதேவிக்கு, சங்கரனார் ஒரு

பிள்ளை யானது புதுமை" என்று கூறும் மக்கள் வாழ்த்துகளைப் பெறும் சல்லமாதேவியின் சிறப்பும் மகிழ்ச்சியும் மன்னவன் அடையும் பெருமையும் சிறப்பும் நாடகத்தின் இன்பக்காட்சிகளாக அமைவதோடு மக்கள் உள்ளத்தே நிறைவை ஏற்படுத்துகின்றன.

**சொல், தொடர்களை ஆண்டுள்ள முறை.**

இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற கோபுரத்தைக்
"குந்தனம் எழுதிய கோபுரம்" என்பர்.

செய்தியாது? என்பதை "வந்த வர்த்தமானமும் தெரியச் சொல்லும்" என வினவுவர்.

விலைமாதர் பெறும் பொருளை - ஈட்டுப் பொருள், பொருத்தப்பணம் என்னும் பொருள்பட -

"முன் பணயம் வாங்கியொரு அன்பருடன் அறியாத"

"ஆயிரம் பொன் பணையம்" என பணயம், பணையம் என்னும் சொற்களால் குறிப்பர்.

"திசைகளது பிசகியே சென்றிடினும் இரவி-என்

வசனநெறி பிசகாது" என்று கூறும் உள்ள உறுதி வல்லாளனுக்கு இருந்த நிலையைப் புலப்படுத்தும் ஆசிரியர்,

"வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கு ஏகினும்
..........................................
வான்பொய்ப்பினும தானைபொய்யாக் காவிரி"
(பட்டினப்பாலை)

போன்ற பல இலக்கியக் கருத்துக்களை நினைவூட்டிச் செல்லுந்திறம் வியத்தற்குரியதாகும்.

முன்பு ஆயிரம் பொன் பெற்றிருந்தால் யாம் ஐயாயிரமாகத் தருவோம் என்று கூறி விலைமாதரை அழைக்கும் அமைச்சரிடம்

"அமளியில் வந்த
நாயகன்தனைவிட நமக்கடுக் காது"

என்று கூறி வரமறுக்கும் விலைமாதரின் பண்பினை

"கணிகை யாமவர் கற்பினை யருந்ததி தனக்கே
இணையெனச் சொல விசைக்குமா
வருணையம் பதியாம்"

என்னும் அருணசல புராண அடிகளும் எடுத்து இயம்பு வதைக் காணலாம்.

வல்லாள ராஜன் யக்ஷகானம் என்பது தொடங்கி, அருணேசர், அருணசலேசுவரர் தக்ஷணம், கஸ்தூரி திலகம், தியாகக் கீர்த்தி யாபரணு!, அன்னபிக்ஷா ணம் கந்தன் சரணமலர், நரபதி வல்லாள மகிபதி, இபமுகக் கடவுள், மரண பவமற, சிவன்கிரிவடிவாய், கனகமன்றத்தில், சதிரூபவதி, மதிவதனத்திஞள் - போன்ற வடமொழிச் சொற்களும் சொற்ருெடர்களும் நூற்றுக் கணக்கில் நிறைந்து காணப்படும் நடை, ஆசிரியர் கால மொழி நிலையினை உணர்த்தா நிற்கும்.

இறுதிவரை, தெய்வத்தன்மை ஒளிவிட இயற்றப் பெற்றுள்ள இந்நாடகத்தின் ஆசிரியர் யார் என்பது அறிய இயலவில்லை. ஆயினும்,

"விக்குருதி ஆண்டு..........................பொய்கைப் பாக்கத்தைச் சார்ந்த ......... முத்துநாராயணன் கை அஸ்த லிகிதம்" என்ற இறுதித் தொடர்களால் இச்சுவடியினை எழுதிவைத்தவருடைய ஊரும் பெயரும் தெரிவதுடன் கி.பி. 1830க்குச் சரியான விக்குருதி ஆண்டில் இச்சுவடியை எழுதியிருக்க வேண்டும் என்றும் அறிய முடிகிறது.

தமிழ்ப்பா, பாஇனங்களில் பதினொரு பாடலும் திபதை, சிந்து, அர்த்தசந்திரிகை, தரு போன்ற இசைப் பாடல்களில் இருபத்தைந்தும் தாளம் மட்டுமே குறிப்பிடப்பட்ட இசைப் பாடல்களில் ஐம்பத்தாறும் ஆக 92 பாடல்களும் ஆங்காங்கு வசனங்களும் அடங்கிய இந் நாடகச் சுவடி சென்னை அரசினர் சுவடி நூலகத்தில் D.506ஆம் எண்ணில் பாதுகாக்கப் பட்டு வருகிறது. அதனை முழுமையாகப் படி யெடுத்துக் கொண்டு, ஆர் எண் 2698-ல் உள்ள சுவடியை ஒப்பிட்டு ஆங்காங்கு காணப்பட்ட சில சிறந்த பாட வேறுபாடுகளையும் குறிப்பிட்டிருக்கிறேன். இவை இரண்டும் ஓலைச்சுவடிகள். படியெடுக்கப் பட்டுள்ள தாள்களும் நூலகத்தில் உள்ளன.

நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சி யாளருக்கும் தமிழகப் பண்பாடும் கலையும் பற்றி ஆய் வோருக்கும் இசைத் துறையினருக்கும் பெரிதும் பயன்படும் என்ற நம்பிக்கையோடு இப் பழம் பெருஞ் செல்வத்தை உங்கள் முன் படைத்து மகிழ்கிறேன்.

சென்னை-5<br>25-12-77 டாக்டர் **எஸ். ஏ. கே. துர்க்கா.**

# வல்லாள ராசன் இசை நாடகம்

## (யட்சகானம்)

### காப்பு

(விருத்தம்)

தந்தையும் தாயுமாகித் தானுயர் வனத்துநன்ன
எந்தையா மருணையீசன் இனியவல் லாளனார்க்கு
மைந்தனாய் வந்துதித்த வளமைசேர் கதையைக்கூற
தந்திமா முகனும்கந்தன் சரண்மலர் காப்புதானே. (1)

(ஆசிரியப்பா)

சீர்தரும் தமிழ்வளர் சிறத்தொண்டை நாட்டில்
பேர்பெறும் அருணையம் பெரும்பதி தனிலே
அருணாச லேசருக் கன்புதான் புரியும்
நரபதி வல்லாள ராசனுக் குகந்து
சிவன்சிறு பாலனாய்ச் செழித்திடத் தோன்றி
அவன்தனை ஆண்டுகொண் டருளிய கதையைப்
பண்ணுறு இசையினால் பாருளோர் மகிழ
நண்ணுற வேயட்ச கானமாய் நாவில்
நினைத்திட முத்தியை நேசமோ டளித்து
அனைத்துயிர் யாவையும் அருள்பரன் இருக்கும்
குந்தனம் எழுதிய கோபுரத் தமர்ந்த
கந்தனும் இபமுகக் கடவுளும் துணையே. (2)

சம்பை (நாட்டை)

நாற்றிசையும் புகழருணை நல்லதிருக் கோபுரத்தில்
வீற்றிருக்கும் கணபதியைப் போற்றிப் பணிவேனே.

குணமதிக மாமருணைக் கோபுரத்தில் வாழும் நிறைந்த
கணபதிதன் பாதம்நித்தம் நினைந்து பணிவேனே.

நானிலமெல் லாம்புகழும் நல்லதிரு முன்னல்நகர்
வேணுதருங் கணபதியை விரும்பிப் பணிவேனே.

திறத்தில்மிகு சோணகிரிச் சித்திரமணிக் கோபுரத்தில்
நிறைத்தகண பதியையான் நினைவில் மறவேனே.
(3)

வசனம்

மன்னும் திருவருணைக் கோபுரத்து முருகவேளை
ஏதென்று துதிசெய்வேனோ வென்னில்,

ஏகதாளம் (நாட்டை)

எந்தனை யாண்டுள சிந்தனை தீர்த்தருள்
கந்தனை யனுதினம் வந்தனை செய்வாம்.

இமையவர் அனுதினம் பரவிநின் னடிபணி
உமையவள் அளித்தருள் குமரனைப் பணிவாம்.

அருணையில் திருவருள் அணிகோ புரம்தனில்
பிரகத மயிலுறை முருகனைப் பணிவாம். (4)

வசனம்

மன்னும் அண்ணுமலையாகிய அருணகிரியை ஏதென்று
துதிசெய்து வணங்குவேனோ வென்றல்:

திரிபுடை (நாட்டை)

தரணி தனிலுள மனிதர் ஒருதரம்
அருணை கிரியென மரண பவமற
கருணை யதுபுரி யருணை கிரிதனைக்
கருதிப் பணிவேன்.

விண்டு வுஞ்சதுர் முகனும் வெருவுறக்
கொண்டு முன்பொரக் கண்டு அழலாய்
பண்டு தோன்றிய அருணை கிரிதனை
அன்பில் பணிவேன்.

சோதி யாகிய புதலந்தனில்
தொழுது பணிபவா கதிகள் பிறவருள்
ஆதி யாகிய வருணைகிரிதனை
அன்பில் பணிவேன். (5)

வசனம்

பின்னும் கர்த்தாவாகிய அருணாசலேஸ்வரரை ஏதென்று துதிசெய்து வணங்குவேன் எனில்:

சம்பை (நாட்டை)

திருமாலும் மலரயனும் தேடிமுன் னறியாத
அருணாச லேசரடி யனுதினமும் மறவேனே.

உலகுபதி னாலுந்தொழ ஓங்கிவளர் திருவண்ணா
மலையருணை நாதரடி மனதில் மறவேனே.

மங்கையுமைக் கிடபாகம் மகிழ்ந்தளித்த அருணேசர்
செங்கமலத் திருவடியைத் தினமும் மறவேனே. (6)

வசனம்

பின்னும் உண்ணாமுலை யம்மனை ஏதென்று துதிசெய்து வணங்குவேனோ வென்னில்:

ஏகதாளம் (நாட்டை)

விண்ணோர் துதிபுரி அண்ணா மலைதனில்
உண்ணா முலையடி நன்றாய்ப் பணிவேன்.

வரந்தான் அளித்தெனை தினந்தான் ஆண்டவள்
அருந்தா முலையடி தினந்தான் பணிவேன்.

இந்நிலந் தனிலெனை இனியாண் டருள்தரு
கன்னியுண் ணாமுலை அன்னையைப் பணிவேன். (7)

வசனம்

பின்னும் புலவோரை ஏதென்று கொண்டாடுவேனோ வென்னில் :

தாழிசை

அண்ட மாயிரத் தெட்டு மீன்றவள்
ஆதியாகிய சோதியார்
அருணையம்பதி தனிலுகந்திடு
அருணாசலேசர் மகிழ்ந்துதான்
தொண்டனானவல் லாளனாரிட
தோகையாள்முலை மாரிலே
சுந்தரம்பெறு மைந்தனாகவே
தோன்றியேகதி ஈன்றிடும்
பண்டுறைபொரு ளானசெந்தமிழ்ப்
பாடலைப்புல வோர்கள்முன்
பன்னிசைபெற யட்டகானம தாகவேபகர
வெளிதுகொண்டல்
மின்னெதிர் மின்னிமின்னியிடும்
கொள்கைபோலசிறி தாகிலும்
கொன்றைமாமுடி யண்ணலார்கதை
கொள்வரேதமிழ் வல்லரே. (8)

வசனம்

இப்படி மகா கணபதி முதலாகிய சுப்பிரமணியர், அருணாசலேசுபரர், உண்ணாமுலையம்மனையும் துதி செய்து வணங்கி, புலவோர்களையும் புகழ்ந்து கொண் டாடி வல்லாளமகாராசனுட சரித்திரமாகிய புண்ணி யக் கதையைத் தமிழினாலே அஷ்டகானப் பிரபந்த மாகச் சொல்லத் தொடங்கியதற்குக் கதை ஆதிக் கிரமம் எப்படியோ வென்றால் :

## திபதை

உளமகிழ் தேவர்கள் உம்பரும் மகிழும்
வளமைசேர் புகழ்தொண்ட மண்டலந் தனிலே

காஞ்சி மாநகர் காளத்திகாவ லாய்ந்திடும் அம்பல
அருணை ஐந்தான பெரும்பதி தனில்பெயர் பேசிட

முத்திதரும் அருணாசலம் தன்பதி தனிலே
சிவன்கிரி வடிவதாய் தேவர் மானிடரைப்

பவமறுத் தாண்டுநல் பதமளித் தருளி
காசியில் காஞ்சியில் கனகமன் றதநிலும்

வாசியென் றுமைக்கிடப் பாகமே கொடுத்து
அருளுடன் அமர்ந்திடும் ஆலயத் தழகும்

கருணைசேர் கோபுரக் காட்சியின் அழகும்
ஒப்பிலா கிரிசிறந்து ஓங்கிய வழகும்

தப்பிலா முனிவர்கள் தவம்புரி யழகும்
எண்ணிலாத் [1] தடங்களும் இயல்மலர் வனமும்

விண்ணுற வளர்ந்துதான் விளங்குசோ லைகளும்
சதுர்மறை ஓசையும் தமிழிசை ஒலியும்

விதமுறு துந்துமி மிகுசங்கு ஒலியும்
வேதியர் வீதிகள் மிகுபல கோடி

நீதிராசாக் கள்வீதி நெடும்பல கோடி
வர்த்தகர் வாழ்ந்திடும் மனைபல கோடி

குற்றமில் லாதவர் குடிமனை கோடி
மாசிலா வாணர்கள் [2] வாழ்மனை கோடி

வேசியர் விளங்கிய வீடுகள் கோடி
இரதகச துரகமும் நரபதா திகளும்

எதிரெதிர் நெருங்கியே இடங்கொளா தாகித்
துன்னியே நிறைந்திடுந் தொல்பதி தனக்கே

1. ஸ்தலங்களும். 2. மகிழ்மனை.

மன்னவன் வல்லாள மகிபதி இராசன்
எண்டிசை புரந்தவன் எத்திசை தனிலும்

கொண்டனன் கீர்த்தியைக் குவலயத் தரசர்கள்
கண்டுகைத் தொழுதிடக் களிப்பினுல் மிகுத்து

அண்டர்நா யகன்தனக் கன்பனும் ஆகிச்
சங்கமர் வேதியர் தமைத்தினந் தொழுது

அங்கவர்க் கன்னமும் ஆடையும் அளித்து
வசையிலா எழிலுள்ள மதனவேள் என்ன

இசையவே மாதர்கள் இருவரைப் [8]புணர்ந்து
சதிரூப வதியெனும் சல்லமா தேவி

மதிவத னத்தினுள் மல்லமா தேவி
இவருடன் அனுதினம் இன்பமே புணர்ந்து
அவனியை ஆண்டுதா னவன்இருந் தனனே. (9)

சம்பை (சங்கராபரணம்)

அளகைபோல் அழகுடைய அருணைமா நகரதனை
வளமைபெற வல்லாளன் மகிழ்ந்தாளும் அந்நாளில்

அருணைச லேசரடி அனுதினமும் மறவாமல்
கருணையுடன் யாவரையும் களிக்க வருள்கொடுத்தே

கொடும்புலியும் பசுவுமொரு குளத்துறையில் நீர்பருக
விடஅரவும் எலியுமொரு விடத்திருந்து வாழ

பருந்துடனே பசுங்கிளியும் பண்பாக ஒருகூட்டில்
இருந்துகளித் திடமாரி என்னுளும் பொழியும்

செழித்துலகில் பரிசனங்கள் சிறப்பாகக் களிப்பெய்த
தழைத்துமறை யறம்விளங்கத் தானரசு புரிந்தான்.
(10)

வசனம்

இப்படி நீதியும் புகழும் திறமமும் சவுரியமும் விளங்க, அருணசலேசருக் கன்பராகிய வல்லாளராயனுடைய தேவிமார்கள் எப்படிக் கொத்தவர்களோ வெனின்:

8. மணந்து.

ஏகதாளம் (ஹுசேனி)

சீதள மதிமுகம் மாதுளை மலரிதழ்
மேதகு கருங்குழல் விழிகயல் மின்னார்
தண்தர ளம்புனை செண்டிரு மார்முலை
கண்டனள் நடையிலே உண்டெனு முலையாள்
பாடக நூபுரம் மார்பணி யரசமும்
ஆடக நவமணி நீடிய எழிலாள்
இப்புவி மீதினில் கற்பினில் பெரிய
மெய்ப்புள அருந்ததி கொப்புடன் மின்னார்
ஆகம மதனுருவ தானவல் லாளருக்கு
மோகன மாகிய தோகையர் இருவர் (11)

வசனம்

இப்படி அதிரூப மாதராகிய சல்லமா தேவி, மல்லமா தேவி இவர்களுடனேயும் மருவி வாழ்ந்து மகிழ்ச்சி பொங்க அருணபுரிப் பட்டணத்தை யாண்டுகொண் டிருந்தனன்.

திரிபுடை (சாரங்கா)

கொங்கை யழகுள மங்கை இருவர்கள்
தங்க ளுடன்மிக இங்கி தம்பெற
பொங்க முடன்மதன் ரதியும் என்னவே
புணர்ந்து மகிழ்வாய்

புத்தி யாலறி வுற்ற மந் திரிகள்
நித்தமும் நெறி யுற்ற தோதிட
வெற்றி யாலர சுரிமை யறமுடன்
விளங்க செலுத்தி

இராசரா சாக்கள் முறையில் திறையிட
நல்ல வேதியர் வேள்வி செய்திட
நேச மாகிய பரம சங்கமர்
நிறைந்து வர (12)

வசனம்

இவ்விதமாக ஒன்றும் குறைவில்லாமல் இருக்கிற வல்லாள ராசனுக்குச் சந்ததி இல்லாமல் சிந்தை நொந்து இருந்தனன்.

ஏகதாளம் (முகாரி)

இந்திரன் போல மகிழ்ந்து இருந்த வல்லாளருக்கு
மைந்தரில் லாதொரு மனக்குறை யாகி

கவலை கொண் டனுதினங் காவலன் மனத்தினில்
சிவனே துணையெனச் சிந்தையில் [4]நினைந்தான்

அத்தர் அண் ணுமலை வித்தகர் அடியிணை
நித்தமுப் போதினும் பத்தியில் தொழுது

மாசறு திருவரு ணுபுரி யீசனைத்
திறமுட னேதினம பூசைசெய் திருந்தான். (13)

வசனம்

பின்னும் மைந்தனில்லாத சிந்தனைதீர வல்லாள ராசன் ஏது செய்தனன்:

திரிபுடை (கல்யாணி)

கோபுரம்மதில் ஸ்தூபிஆலயம்
கொடிகள் தோரணம் மேடைமண்டபம்
தாயரம்பெறச் செம்பொனுலிவை
தழைக்கச் செய்தான்
விசிறிசாமரை கொடிகள் விளக்கொடு
வேண்டும்பலப்பல பூஷணங்களும்
இசையவேநவ மணியினுலமு
செரிக்கச் செய்தான்
படித்தரங்களும் மிகுத்தசிறப்பொடு
பரவத் தேர்த்திரு நாளும் ஒளிபெற

4. நினைந்தே

நடத்தியனுதினம் அருணை நாதர்க்கு
அன்பனுனன்
வந்தபேர்தமக் கன்னம்ஆடையும்
அணியும் பொருள்களும் உதவியனுதினம்
ஈந்து சேகரர்க் கடிமையாகவே
இருக்குங் காலை. (14)

வசனம்

இப்படி, அருணசலேசுவரருக்கு ஆயிரக்கால் மண்டபமும் கோபுரமும் மதில், ஸ்தூபி, தேர், திருநாள் முதலானதும் செய்து நடத்தி, பிராமணர், சங்கமர் முதலான பேருக்கு மிகுதியாகத் தருமமும் செய்து வல்லாள ராசன் இருக்கிற நாளில் ஒருநாள்:

திபதை

எண்டிசை யோர்புகழ்ந் தேத்திடும் தொண்டை
மண்டலம் புரந்திடும் வல்லாள ராசன்
நலமுட னேசுப நாள்ஒரு தினத்தில்
கொலுச்சபா மண்டபம் குறுகியே செம்பொன்
மேய்ந்தசிங் காதன மீதினில் இருந்தான்
ஆய்ந்தமா மறையவர் ஆசுகள் கூற
மசிதம் புரந்திடும் மகுடமன் னவர்கள்
கைத்தலம் கூப்பியே கண்டடி பணிய
உறைநெறி காலம் மூன்றுகந் தறிவிக்கும்
விரைசெறி மந்திரிகள் விளங்கிட ஒருபால்
உயிர்க்குயிர் ஆகிய உறவினத் தோர்கள்
செயலுள மரபுளோர் செழித்திட ஒருபால்
நிகரிலாப் புலவர்கள் நிறைந்திட ஒருபால்
கிரிபரி சிவிகையின் காவல ரான
பரிவுள வீரர்கள் பரவிட ஒருபால்
அகமகிழ் மாதர்கள் ஆடவே ஒருபால்
வஞ்சியர் வெண்சா மரைகளும் வீச
விஞ்சியர் பேரிகை மிகுசின்னம் உறைய

திங்கள்செஞ் சடைமுடி சிவன்அன்ப ரான
 சங்கமர் இரப்பவர் சதகோடி வந்து
கேழ்ப்பவர்க் கெல்லாம் மகிழ்சொர்ணம் மாறி
 சிந்தைகள் களித்திட தியாகவை போகம்
அருளியே தன்மனம் மகிழ்ச்சியே பொங்கி
 இறையவன் ஒருநின் வென்றியே நினைந்து
இசைந்துதன் நெஞ்சினுக் கேற்றிடும் அமைச்சன்
 அவன்தனை நோக்கியே அரசனும் மொழிவான்
அண்ணலார் திருவடிக் கன்புசேர் தொண்டர்
 என்றுகொண் டெவரேனும் ஏதுகேட் டிடினும்
கொடுப்பது கருதினேன் குவலயந் தன்னிலே
 தடுத்திடா தொருநெறி சாற்றுமென் றனனே.
(15)

வசனம்

இப்படிச் சொல்லிக் கேழ்க்கின்ற ராசாவை நோக்கி மந்திரி ஏதெனச் சொல்லுவான்:

சம்பை (தன்யாசி)

பெரிதான விரதம்நீர் பிடிக்கமனம் எண்ணியது
 அரிதாகும்
 கேட்டபொருள் அளிக்கவசமோ
கேட்டபொருள் அளித்தபேர் உலகினில் யாருமில்லை
 தேட்டமுள்ள இந்திரர்க்கும் செய்யமுடி யாது

மதிகுலத்தில் மனுகுலத்து மன்னவர்கள் ஆனபேர்
 இதமாகக் கேட்டபொருள் ஈந்தவர்கள் இல்லை
இந்நாளில் அருணேசர் ஈசர்திரு வுளச்செயலே
 மன்னுஉன் மனக்கருத்தில் வந்துரைத்த தாகும்

பிடித்தகருத் தழியாமல் பேருலகில் யாவருக்கும்
 அடுத்தவர்கள் கேட்டபொருள் அளிப்பதே உறுதி
ஈசனரு ளாலிதற்கு இடையூறு வருவதில்லை
 நேசமாய் முடிந்தேறும்
 நினைந்தகருத் தென்றான். (16)

### வசனம்

இப்படிச் சொல்லிய நீதிமந்திரி மொழியைக் கேட்டு வல்லாள ராசனும் ஏதெனச் சொல்லுவான்:

**திரிபுடை** (அடாணு)

நீதிபுகல் மதிமந்திரியே உயிர்போதல் வருகினும்
இதுதனக் கினிதிது செய்வறியேன்பின் சிவனிட
செயலென்ளுமோ
அவனிகரி பரிமாதர் செம்பொனி ஞடையிது முதலாவி
கேழ்க்கினும்
சிவன்தன்னருளால் கொடுப்பதேதுநம்
சிந்தையில் என்ருன்
நாவிஞ லெவராகிலும் நமைநாடிக்கேழ்ப்பது
ஈகுவேன்என
காவுசூழ்புவி அறிய[5] தானக்கொடி கட்டிஞனே.
(17)

### வெண்பா

இன்ன துரைத்துவிடை யாவர்க்கு மேவழங்கி
மன்னன்மணி மாளிகையில் வந்தெய்தி -
புன்னகையார்
மங்கை யிருவர் மதிமுகத்தை நோக்கியிவை
பொங்கமுட னேபுகலு வார். (18)

**அடதாளம்** (ஆனந்த பைரவி)

வஞ்சியாகிய மனேவியேநீர் மகிழ்ந்துகேளும்
ஒருமொழி
நெஞ்சில்யானெரு விரதமொன்றுநான் நினைந்து
பூண்டேன்
அருணையரனிட அடியவர்கள்முதல் யாவரேனுங்
கேட்டது
பரிவில்கொடுப்பது எனதுவிருதெனப்
பலர்க்குமிசைத்தேன்

5. அறக்கொடி

இன்றுயான்மனத் தெண்ணம்பூண்டது வென்றி
பெறவே
ஒன்றுநீர் நன்றதால்முடிந் தேற இசைந்துநீர்
நடந்துகொள்வீர். (19)

### வசனம்

இவ்விதம் உரைத்த புருஷ சிகாமணியாகிய [6]பிராண நாயகனும் மனம் மகிழ்ந்துரைத்தனர்.

**சம்பை** (இந்துஸ்தானி பியாக்)

அந்தணர்க்கும் சங்கமாக்கும் அவனிதனில்
உள்ளோர்க்கும்
வந்துவந்து கேட்டபொருள் வழங்கியிடும் நாளில்

திங்களணி சோணேசர் அடியவர்கள் எல்லார்க்கும்
பொங்கமுடன் ஈந்திடுதல் எங்கும்பே ராகி

தேசம்ஐம் பத்தாறு திசையிலுள்ள பேர்கள்எல்லாம்
ஆசையுடன் அனுதினமும் நேசமுடன் வந்தார்

இல்லார்க்கும் வல்லார்க்கும் எல்லார்க்கும்
கேட்ட பொருள்
வல்லாள பூபதியும் மகிழ்ந்தளிக்க லானர். (20)

### திபதை

இப்படி வல்லாள ராசன்எது கேட்டிடினும்
அப்பொருள் யாவர்க்கும் அளித்திடும் நாளில்

குடதிசை வடதிசை குணதிசை தட்சணம்
படிமிசை படியுற விரவிவந் தெய்தி

அன்னம்கேழ்ப் பவர்கோடி ஆடைநல் மணிகள்
சொர்ணம்கேழ்ப் பவர்கோடி துரகதண் டிகைகள்

ஆனைகேழ்ப் பவர்கோடி அழகுசேர் கன்னி
தானம்கேழ்ப் பவர்கோடி தரணிமா மணிகள்

6. மகிழ்நன்

வீடுகேழ்ப் பவர்கோடி விளங்கிய காவும்
நாடுகேழ்ப் பவர்கோடி நாவலர் கோடி

வந்துவந் தெண்ணிலா [7]மானிடர் தமக்கு
தந்துதந் தவர்க்கெல்லாம் தியாகவை போகம்

மலரடி தேடிமுன் மாலறி யாத
அலர்முடி யண்ணலார் அருணாச லேசர்

[8]மலர்மகிழ் திருவண்ணா மலைநகர் ஆளும்
சேனைசூழ் வல்லாள தீரன்தன் கீர்த்தி

பூவுல கத்திலே [9]புகலரி தான
தேவர்தன் உலகினும் செழித்திட மிகுத்துப்

பரந்திடும் கயிலையில் பராபர னான
அருந்திடா முலைபங்கன் அருணாச லேசன்

இருந்தன னுமையுடன் இமையவர் சூழ
[10]சார்ந்திடும் வேளையில் [11]சங்கீத நாரதரும்

போந்துசங் கரனடி போற்றியே வணங்கி
தாழ்ந்துமா தவருடன் தானிருந் தனனே. (21)

வசனம்

அப்போது பரமேசுவரனுர் நாரதரைப் பார்த்து ஏதெனச் சொல்லுவார்:

சம்பை (செஞ்சுருட்டி)

திங்களணி அரனும் சிறுமுறுவ லாகியே
[12]அங்குவரும் நாரதரை அன்பில்முகம் நோக்கி

மூவுலகுஞ் சஞ்சரிக்கும் முனியேயிக் குவலயத்தில்
ஏதுசெயல் [13]புதுமையை இயம்புவீர் என்றுன்

முக்காலங் களுமறியும் முனியே[14]இக் குவலயத்தில்
இக்காலந் தனில்புதுமை ஏதுபுகல் என்றுன். (22)

7. மனு நிறைந்திடவும் 8. மனம் மகிழ் 9. புகழரிதான 10. சிறந்திடும் 11. திகழும் 12. அங்குறையும் 13. புதுமையேதியம்புவீர் 14. இப்புவிமீதில்

**வசனம்**

இப்படி கேட்ட பரமேசுவரர் பாதத்திலே நாரதர் பணிந்து ஏதெனச் சொல்லுவார்:

**ஏகதாளம்** **(பந்துவராளி)**

பூதலந்தனில் அருணபுரி யென்றொரு மாதலமுள்ளது
அதையாளும் வல்லாளன் கொற்றவர் தனில்மிகு

உத்தம ஞகிய எத்திசை யும்புகழ்
சத்திய வசனன் மா நிலத் தோர்தான்

வந்தவர் கேட்பது தானளிப் பேனென்
ஆணவ முடனே மாதவ முடனே

விருதுட னேகொடி பரிவுடன் நாட்டியே
சதிருடன் அளித்திடும் தியாகிய தானன். (23)

**வசனம்**

இப்படி, பூலோகத்திலே, வல்லாள மகாராசன் எப்பொருள் கேழ்க்கினும் அப்பொருள் கொடுப்பேனென்று தியாகக்கொடி கட்டி, விருதுபூண்டு இருக்கிறன் என்று நாரதர் சொல்ல, பரமேசுவரரும் கேட்டுச் சந்தோஷமாகி அங்கேது செய்தனர்:

**திரிபுடை** **(காம்போதி)**

இமய கிரியருள் [15]குமரி உமையிட
ஈச ஞரரு ஞச லேசரும்
அமர ரானவர் தமக்குவிடைகொடுத் தருளினரே.

கயிலை மலைதனில் கௌரி யாள்தன்னைக்
கருணை பெறவிரும் என்று நாமினிக்
கயிலை யலதாகிய பூதலந்தனைக் கேகிவருவோம்

என மொழிந்தருள் [16]காபுரந்திரன் தனை நினைந்திட
அவனும் வந்தடி தனில் வணங்கினன்
அவனை நோக்கியே சாற்று கின்ருர்

15. குமரியிடமுறை 16. காபுரிக்கிறை

நண்பனெனும்வல் லாள பூபதி
அன்பு கண்டிட இன்ப முடனே
செம்பொன் [17] நிதிகொடு நண்பனென்ஞெடு
செல்லவேண்டும் (24)

வசனம்

என்று அருணசலேசுபரராகிய பரமேஸ்வரனும் குபேர ஞடனே வல்லாள மகாராசாவினுடைய அன்பு சோதித்து ஆட்கொள்ள வேணுமென்று நினைத்து, பூலோகத்துக்கு எவ்விதமாக வந்தனரோ வெனில்:

திபதை

ஈசனுர் இப்படி இயம்பிட அளகை
வாசனும் குபேரனும் மனம்புள கிதமாய்

ஆயிரஞ் சாளிகை அபரஞ்சி யான
காய்கதிர் ஒளிதரும் கன நவ மணியும்

அழகுசேர் ஆடையும் ஆபர ணங்கள்
செழுமைசேர் [18] ரஞ்சித சிறப்பு பூஷணங்கள்

கதம்ப கஸ்தூரி கற்பூர குங்குமமும்
இதம்பெறும் இளவிலை இரதநற் கனியும்

அகமகிழ்ந் தரிவையர் ஆசையே எய்தும்
வகையெலாம் கைக்கொண்டு வந்தனன் குபேரன்

ஆதியாம் கயிலைவாழ் அருணச லேசர்
மேதினி தனிலொரு வேடமே பூண்டார்

சடைதனைக் குங்குமச் சாயலாய் விளங்க
அடர்தரும் பாகையாய் அழகுறப் புனைந்து

இளம்பிறை தனையலர் என்னவே முடித்து
வளம்பெறச் சேடனை வாகுடன் குழையில்

வச்சிரக் கடுக்கனுய் வரிசையாய் அணிந்து
மெச்சுமெய் யெல்லாம் விபூதியே தரித்து

17. ஈந்திடும் 18. உச்சித

திகழவே கஸ்தூரி திலதமும் அணிந்து
மகிழ்வுறச் சந்தனம மார்பினில் பூசித்

தங்கநற் கடகமும் சரப்பளி யறுனள்
செங்கையில் ஆழியும் செழிக்கவே தரித்து

மார்பினில் உருத்திராட்ச மாலையும் விளங்கத்
துகிலதாய்க் கரியுரி துலங்கிட புனைந்து

மருங்கினில் புலியுரி மதிப்பிலா விலைசேர்
அரைதனில் பட்டுடை யாகவே உடுத்தி

தேடிமால் அறியொணு திருவடி தனக்குக்
கோடுடை நந்தியைக் குறட தாய்ப் பூண்டு

சோதியான் சூலமும் துடியிடை மழுமான்
மாத்திரைக் கோலென வளர்கரத் தேந்தி

வானவர் மாலயன் மகிழ்ந்துகொண் டாட
தாெெரு குமார சங்கம ஞகித்

தோழனுங் குபேரனும் சோளிகையொன் றேந்தி
சீடனுய்ப் பின்வர சிறியசங் கமனுய்க்

கைத்தலத் தினிலொரு காமசாத் திரத்தின்
புத்தக மும்சிறு புள்ளடிக் கோலும்

கொண்டுமா நிலந்தனில் குறுகியே நடந்து
கண்டுவஞ் சியரெலாம் காதலே கொள்ளச்

[19]சோலைமா நகருளச் சனமெலாம் மகிழ்ந்து
காணவே நடந்தனர் கயிலைவாழ் அரனே. (25)

வசனம்

இவ்விதமாகப் பரமேசுவரரும் குமார சங்கமராகி உருவங் கொண்டு, குபேரனைச் சித்தாண்டிப் பயலாக்கிக்கொண்டு, அருணைமா நகரப் பட்டண வீதியிலே வந்தது எவ்விதமோ வென்னில் :

19. சோணமா

**ஆனந்தக் களிப்பு** **(புன்னுகவராளி)**

தனதந்த ஞதந்தஞ ஞதந்தஞ ஞதன தந்தஞஞ

தரணிதனில் அருணை நகர் வாழ – நல்ல
தற்பரம தாய்வந்த சோணகிரி வாழ
கருணைபுரி அருணேசர் வாழ - கவி
உண்ணுமுலை ஸ்திரமாக வாழ
உரகமணி யணிகோபு ரத்தில் - வாழும்
முருகவேள் கரிமுகன் இருவோரும் வாழ
பரிவான தொண்டர்பரி வாரம் - நித்தியம்
பத்தரொடு சித்தர்கள் முற்றிலும் வாழ (தனதந்த)

சீர்கொண்ட மண்டலம் வாழ - இந்த
தேசமோர் ஐம்பதும் ஆறுமே வாழ
பாராளும் வல்லாளன் வாழ - இந்த
பாருலகி லுள்ளநல் லோர்பரவி வாழ
ஏரான அருணைமா நகர – மூதூர்
எல்லோரும் எந்நாளும் மென்மேலும் வாழ (தனதந்த)

தந்தையில்லை தாயுமில்லை – தம
ரில்லை யுறவில்லை தனியொருவ ஞனேன்
அந்தரம தாயிருந்தேன் – என்றும்
அம்பலத்தே யலைந்துதிரிந் தேனே
இந்திரன் மாலயன் மற்ருே - ரெவர்
களையும்நான்பொருள தாயெண்ணி லேனே.
(தனதந்த) (26)

**வசனம்**

இவ்விதமாக, குமார சங்கமரும் அருணபுரிப் பட்டண வீதிகள் எல்லாம் பிராமணவீதி, இராசவீதி, வர்த்தகவீதி மற்றுமுள்ள வீதிகள் தோறும் பாடி நடந்து வேசியர் வீதியில் வந்தது எவ்விதமோ வென்னில் :

**சிந்து** **(கீரவாணி)**

வந்தனர் வந்தனரே – குமார சங்கமர்
வந்தனர் வந்தனரே
வந்தனர் சங்கமர் அந்தமதாகவே
பந்தெனு மாமுலை சுந்தர மாதர்கள்
வந்தந்த நேயவர் முந்திமயல் கொள்ள
செந்தமி ழாலொரு சிந்துகள் பாடியே (வந்தனர்)

மாசறு மேனியில் பூசிய சந்தனம்
வாசனை யெங்கெங்கும் வீசிடக் கண்டந்த
தாசிமயல்கொண்டு பேசியே மேல்விழும்
ஆசையுடன் வரும் வேசியர் வீதியில் (வந்தனர்)

கன்னல் கணைமதன் தன்னைக் குரங்கெனும்
நுண்ணிடை யாகிய கன்னியர் எத்தனை
சன்னைகள் காட்டியே மன்னியே பின்வர
உன்னித மாகியே இன்னிசை பாடியே. (வந்தனர்)
(27)

**வசனம்**

இப்படி வேசியர் வீதியில் குமார சங்கமர் வண்ணம், கோவை, மடல், உலா, இன்னிசைக் கலித்துறை, வெண்பா, விருத்தம், சிந்து முதலாகப் பன்னிசையுடனே பாடி வருகிறபோது பருவமாகிய வேசியர் அடங்கலும் ஆசை மையல் கொண்டு பின்னே தொடர்ந்து வர, அவர்களைப் பார்த்து அங்கே ஏதெனப் பாடினரோவெனில் :

**வெண்பா**

அச்சமறத் தில்லைநகர் அம்பலவர் சன்னதியில்
பிச்சையெ றைறும் உன்னடியேன் புறப்பட்டேன் –
இச்சையுடன்
நல்லோர் பெரியோர் நயந்துரைத்தோர் யாவர்முதல்
எல்லோரும் பிச்சையிட்டீ டேறவே. (28)

## இன்னிசை

நச்சரவின் நஞ்சுகந்த நாதரரு ணேசருக்கு
உச்சிதமாய் ஆடல்புரி ஒண்தொடியே நீர்கேளீர்

கச்சையிடும் மன்மதனைக் காணுமல் ஓட்டிவிட்டுப்
பிச்சையென்றும் வந்தேன்நான் பிச்சையிட
மாட்டீரோ

கச்சிறுகத் தான்பூண்ட கனதனத்துண் ணுமுலையாள்
மெச்சியிட ஆடல்புரி மெல்லியலே நீர்கேளீர்

பச்சையிளம் வாழையிலே பசுந்தேனின் கூடழிக்க
இச்சையுடன் வந்தேன்நான் [20]இசைந்தழைக்கக்
காட்டீரோ.

மயல்கொடுத்துத் தானெதிர்த்தும் மற்றவிரு
குஞ்சிரத்தைக்
கையில்பிடிக்க வந்தேன்நான் காட்டியிட மாட்டீரோ

மணிவிதனைத் தலையில் வைத்திருக்கும் சோணேசர்
தனது [21]விழிகளிக்கும் தையலரே நீர்கேளீர்

கனியிரத மாம்பழத்தைக் கடித்தருந்த வந்தேன்நான்
மனமிரங்கித் தந்துபின்பு வாங்கிக்கொள்ள மாட்டீரோ
(29)

## கலித்துறை

அலையாழி நஞ்சை யமுதா யருந்திமுன் னமரரெல்லாம்
நலியாமல் காத்திடும் அருணுச லேசர்தன்
நன்வரைமேல்
நிலையா யிருக்கும் விலைமாத ரேயென்னை
நீர்கொடுபோய்
புலியூரைக் காட்டிக் கலையூரிற் சேர்த்திடிற்
புண்ணியமே. (30)

20 காட்டியிட மாட்டீரோ 21. விழிகளுக்கும்

விலைமாத ரேவிலை செய்துசொல் லீரினி
மேல்கொள்ளவே
கலையும் புலியும் கமலமுந் தேனுங் கதலிநறுஞ்
சிலையும் பன்னகமுஞ் செவ்விள நீரும்
சேல்கெண்டையும்
நிலையும் தந்தால் கொள்ளுவேன் பொன்னித்தனை
யென்று நீர் சொல்லுமே. (31)

### வசனம்

இப்படியாகக் குமாரசங்கமர், திருவருணைபுரி தேவரடியார்களுடனே தமிழ்க் கவிகள் உரைமறு பொருளாகச் சொல்லுமளவில் அவர்கள் ஆற்ற ஒண்ணாத மையல் விரகங்களைக் கொண்டனர்.

**சம்பை** **(மோகனம்)**

அருணைபுரி யதுதன்னில் குமாரசங் கமர்வந்து
பரிவுடைய பொதுமாதர் தெருவில் நடந்திடவே
கண்டனர்கள் சங்கமரைக் கண்டளவி லேகாதல்
கொண்டார்கள் [22]மங்கையெனும் கோதையர்கள்
எல்லாம்
கலைசோர வளைசோர காரளக மதுசோர
முலைமீது பசலையுற மோக மதுவானார்
இருள்கொண்ட குழல்மாதர் இமயவரை
மயல்செய்வோர்
மருள்கொண்டு மதன்பால் வாடி யிடலானார். (32)

### வசனம்

இப்படி விரக மயல் கொண்டு வேசியர் அடங்கலும் குமார சங்கமரைக் குறித்து வந்து அவர்களுடனே ஏதென்று சொல்லுவார்:

22. கன்னியெனும்

திரிபுடை (ஹிந்தோளம்)

அருணை நகருறை பருவ வஞ்சியர் –
ஆயிரமனையோரும் - வீதியில்
விரக மாகியே சங்கமர்க்கெதிர் மேவிவந்தார்

வந்த வஞ்சியர் தம்மை நோக்கியே
மகிழ்ந்துபுன் னகையாகி - சங்கமர்
இந்துநுதல் மடமாதர் தம்முடன் ஏதுசொல்வார்

காமசாஸ்திரவகை யெலாம் – உமக்
கறியவேநா முரை செய்வோம்
தேமா முலை மாதரே நீர் தெரியக் கேளும்

கொங்கை லட்சணம் வதுலட்சணம் - கூந்தல்
விழி இதழ் போந்த லட்சணம் அங்க லட்சணம்
முளி லட்சணம் யாவும்... (33)

வசனம்

இப்படி குமார சங்கமர் வேசியர்களுடனே காம சாஸ்திரப் பிரசங்கம் பண்ணின உடனே அவருடைய வடிவின் அழகையும் வசன மதுரமும் வாலிப இளமையும் கண்டு மோகமதிகமாய் மயங்கி கண்டகண் இமை கொட்டாமல் பிரமித்து லச்சையுற்றிருந்தனர்.

திபதை

[23] தாக்ஷக ஞனவல் லாளபூ பதிக்கு
நாட்டிய மிகுந்திடும் நடனகன் னியர்கள்

அரம்பையூர் வசியிலும் அழகுள்ள மின்னூர்
கரும்பினும் இனியசொல் காமுகர் நெஞ்சம்

கரைந்துரு கிடமயல் காட்டியே மருட்டி
வருந்திய அடிமையாய் வணங்கிடச் செய்யும்

அத்தர்வாழ் திருவரு ணைபுரித் தலத்து
வெற்றியாய் பெயர்பெறும் வேசியர் ஆனோர்

23. தாஷ்டிக

முத்துமோ கனவல்லி [24]முகைநகை வல்லி
சித்திர ரேகையாஞ் செகமோக ஞங்கி

சம்போக சஞ்சீவி சற்குண வல்லி
மதனசிந் தாமணி மரகத வல்லி

வளரிந்து ரேகை [25]வதன சீதளவல்லி
மாணிக்க வல்லி சங்கரவல்லி சாமரவல்லி

குங்கும வல்லி கோமள வல்லி
இங்கித வல்லியாய் இவர்முத லான

மடந்தையர் ஆயிரம் வஞ்சியர் எல்லாம்
தொடர்ந்தொரு மொழிசொல்லத் [26]தோணு திருக்கும்

சிரிப்பாகியே குமார சங்கமரும்
வஞ்சியரே உங்கள் வளவுக்கு வாரோம்

இத்தினம் இரவுக்கு இனிமன தானும்
பற்றிடும் பணயமே பாவைய ரேநீர்

பெற்றிடும் வரிசையும் பேசிடும் என்ன
சித்தமே களித்தவர் செப்பிடு வாரே. (34)

**வசனம்**

அப்போ வேசியர் ஆயிரம் பேரும் ஏதெனச் சொல்லு வார்:

**சம்பை** **(சண்முகப்பிரியா)**

ஏதுசங் கமரேநீர் எங்களா யிரவருக்கும்
ஓதுமென் றீர்பணயம் இதுவும் புதுமையன்று
ஓரிரவில் ஆயிரவர்க் கொருவர்பணை யங்கொடுத்தால்
ஒருவர் சொல்லவே கேட்டும் அறிந்ததில்லை நாங்கள்
உலகுதனில் ஒருவருக்கு ஒருவரே பொருளளித்து
மருவுவதும் வையகத்தில் வழங்கி யிடும்முறைமை
கள்ளசங் கமரேநீர் கழறுவதெல் லாம்புதுமை

24. முகநகை 25. மதன 26. தோணுமல் நிற்கும்

எள்ளளவு மேயிவ் வார்த்தை இப்போது காணோம்
ஆயிரம் பொன்பணயம் ஆயிரம்பொன் ஆபரணம்
ஆயிரம்பொன் பெற்றஆடை இவையே அல்லால்
சாந்துசந் தனம்விடையம் தந்தனுப்பினால் நாங்கள்
சேர்ந்தணைந்து சுகஇன்பம் தெவிட்டவளிப் போமே. (35)

வசனம்

இப்படி வேசியரானவர்கள் சொல்லக் கேட்ட வுடனே மிகுதியும் சந்தோஷமாகி குமாரசங்கமர் ஏதெனச் சொல்லுவார்:

**திரிபுடை** **(காம்போதி)**

நீங்களுரைத்த சொல் இன்பமாச்சுது - என்னை
ஆட்கொள்ளும் பெரிய சங்கமர்
தாங்கள் அனுப்பிவிட வந்த சீஷன்யான்-தையலாரே
என்னில் எண்மடங்கு அழகுள்ளார் அவர்
என்னில் ஆயிரம் மேலும் உண்டு அவர்
சொன்ன பணயமும் தருகுவேன் அவர் சொகுசுகாரன்
ஒருவர் ஒருவர்க ளாகிவந்து முன்உரைத்த பணயமும்
உடமை பிடவையும் கரத்தில் வாங்கியே
அகத்தில் நீர் செல்லும் கடுகி தானே. (36)

வசனம்

இவ்விதமாகக் குமார சங்கமர் அருளுபுரிப் பட்ட ணத்திலிருக்கப்பட்ட வேசியரான ஆயிரம் பேருக்கும் விரக மயல்பூட்டி, பகல்பொழுது தானே பணயமும் ஆபரணமும் கொடுத்து, மற்றுமுண்டான சுகந்த பரி மளம் பரிமளிக்கும் கஸ்தூரி புனுகு சவ்வாதும் கொடுத்து, ஆயிரம் பேருக்கும் ஆயிரம் புருஷனை அவரவர் விடுதிகளிலே போய் இருந்திட மாய்கை பண்ணி அப்பால் வல்லாள ராசனிடத்துக்கு எழுந் தருளினார்.

**திரிபங்கலும்**

நாணாத வேசியரை எல்லாம்தலை
நாணியிடவே செய்துபோத
சோணேச ரானசங் கமரும் கடுகியே
துரிதமுடனே நடந்தேகி
பாடர் தருந்தமிழ்கள் பாடியந்த வல்லாள
ராயன் மனைதேடி
ஆஸ்தான வாசல்முன் வந்தேன் அரகரா
அன்பான பேரொருவருண்டோ
வல்லாளனைக் காண வந்தேன் நம்முடைய
மனத்தாசை யவருடனே
சொல்லவே நினைந்தே போயொருவர்
நாம்வந்த சேதி
அவருடன் புகன்றால் உமக்குவெகு
புண்ணியம் உண்டாம். (37)

**வசனம்**

இப்படி, குமார சங்கமரும் வல்லாள ராசனுடைய ஆஸ்தான வாசலிலே வந்து வாசல் காக்கும் கொல்லர்களுடனே சொல்ல, அவர்களும் அதிசீக்கிரத்திலே அரண்மனையிலேபோய் வல்லாளமகா ராசாவினுடனே சொல்ல, ராசாவும் வெளியே வந்து குமாரசங்கமரைக் கண்டு இங்கு ஏது சொல்வார் :

**சம்பை** **(பௌளி)**

சொன்னமொழி கேட்டந்த துரைராசன் வல்லாளன்
அன்னேர மேவந்து அடிபணிந்து நின்று

நிற்பதே நிலமீது நிகரொருவ ரில்லாத
தற்பரனைப் போலவே தானிங்கு வந்தீர்

இன்னும் உம்மைப்போல் எவர்களையும் கண்டதில்லை
இன்றுளென் தவம்பலித்து ஈடேறும் நாளோ
அத்தனே வந்துஎன் அரியணையின் மீதிருந்து
சித்தமுற வந்தசெயல் செப்பியருள் வீரே (38)

**ஏகதாளம்** **(கேதாரகௌளை)**

இராசாக்கள் போற்றியே ராச மகிபதி
ராசவல்லாள [27]ராசபூ பதிநீ
எண்டிசை மீதிலும் இமையவர் வாழ்ந்திடும்
அண்டர்தன் உலகினும் அறியுமுன் கீர்த்தி
நின்புகழைக் கேட்டே நெடுநாள் வழிநடந்து
அன்பனே இன்றுநாம் அடைந்தோம் உம் மனையே
இச்சைய தாகநாம் எண்ணியே கேட்பது
நிச்சய மாகவே நீயளிப் பாயே. (39)

**வசனம்**

அப்போது குமார சங்கமரும் வல்லாள ராசனுடைய அரண்மனையிற் போய் சிங்கா தனத்திலும் இருந்து, கேட்டது கொடுக்கும் கீர்த்திப் பிரதாபா வென்று புகழ்ந்து இந்த வசனம் சொன்னவுடனே வல்லாள ராசனும் அன்பு அதிகமான பக்தியுடனே சாஷ்டாங்க மாக தெண்டனிட்டு இரண்டு பாதங்களிலேயும் வணங்கி, கை கட்டி, வாய் புதைத்து, சுவாமி சங்கம தேவரீர்! தாங்களிருக்கும் மலைத்தலமும் வந்த வர்த்த மானமும் தெரிய அடியேனுக்குச் சொல்லவேணு மென்று கேட்டனன்.

**கலித்துறை**

அளந்தா ருலகைமுன் மாலென்று தானை
அருணாசலனார்
வளர்ந்தார் கிரிவடிவா யண்ட முட்டினும் மாலயனுங்
களைந்தும் மறந்தும் மணிமுடி தேடியுங் கண்டறியார்
உளந்தான் மகிழ்ந்து வல்லாளனுக்கு உரைத்தனரே.
(40)

27. நரபதியே

**திபதை**

அடலர சிங்கமே யவனியெண் டிசைக்கும்
கெடிபெறுந் தியாகக் கீர்த்தியா பரனே

உரைத்திடு வோம்நம் ஊரினும் பேரும்
வருத்தமாய் வந்திடும் வாறையுங் கேளாய்

உத்தரம் அதனிலே உயர்ந்த தூரத்தில்
வெத்தியா கியதொரு வெள்ளியாம் [28]தீப்பை

எந்தெந்த நாளைக்கும் இருப்பிடம் அதுநாம்
தந்தை யில்லாத தனியொரு பேதை

பாத்திரம் கொண்டுநாம் பலியிறந் துண்போம்
ஆஸ்தி காலக் காசுக் கவகாசம் இல்லை

கொண்டபெண் ஒருத்திநல் கூத்திபெண் ஒருத்தி
பெண்டிரு வர்களில் சிறுபிள்ளை இருவர்

மூத்தவள் [29]ஏகியே உலகெலாம் திரிந்து
ஏத்திடும் பிச்சை ஈராழிநெல் கொணர்ந்தால்

வையகத் தோர்க்கெல்லாம் வழங்குவள் அதனல்
பையஎன் மேனியும் பாதியாய்ப் போச்சு

மற்றுமோர் இளையவள் மயக்கியே என்னைத்
தத்தியே தலைமிசை தானவர்க் கரைப்பாள்

பிள்ளையில் மூத்தவன் பெருந்தீனிக் காரன்
கள்ளன்காண் இளையவன் கன்னமே இடுவான்

ஒருகுன்றை நம்முது உழநட வாது
பயிர்என்று இருந்திடில் பலிக்கெவர் போவார்

சாம்பலைப் பூசித்தோல் தரித்திருந் தாலும்
வீம்புகள் பேசியே இருக்கவொட் டார்கள்

ஆகையால் சமுசார ஆசையை விட்டு
ஏகனுய்ப் புவியெங்கும் மேவியே திரிந்தேன்

28. தீர்ப்பை 29. பேச்சிறுல்

இரப்பவர்க் கந்தவூர் இந்தவூர் என்று
விருப்பமே யாகிடில் இதுவும்நம் ஊரே

மேதினி தனில் உள வேசியர்க் கெல்லாம்
மதனசாஸ் திரவழி மார்க்கமே அழிய

காமநன் னூல்களும் கலவிலட் சணமும்
தாமறி வித்திடும் தன்பயன் அறுவென

ஆடகக் களஞ்சியம் ஆனதோர் நண்பன்
கூடினன் இவன்தனைக் குபேரன்என் றிடலாம்

அனங்கநூல் கற்றிட ஆசையால் நம்பால்
இணங்கியே நமக்கிவன் இசைந்ததைக் கேளும்

தங்கநற் கடகமும் சரப்பளி யறுனள்
செங்கையில் [30]ஆழியும் செவிக்கழ கான

சவுக்களி பாகை துப்பட்டி பட்டுடையும்
நமக்கழ காகவே நல்கினர் வேண்டும்

சொர்ணமும் அனுதினம் சுவையமு தான
அன்ன பிக்ஷாணமும் அளித்திட லானுர்

எமக்கொரு குறையில்லை இன்றைய வரைக்கும்
உம்மைக்[31]குறித் தொன்றுநா மொன்றுஉண்டு மன்னு

தந்திடு வேனென தானிசைந் துரைத்தால்
உந்தனே டப்பொருள் உரைத்திடு வேனே. (41)

வசனம்

இப்படியாகக் குமாரசங்கமர் சொன்னவுடனே அதிசய முற்று வல்லாள ராசன் ஏதெனச் சொல்லுவான் :

சம்பை (ஹம்ஸாநந்தி)

தேவனெங்கள் அருணகிரி சிவனைப்போ லும்மைக்
கண்டேன்
பாவங்கள் நீங்கித் தவம் பலித்திடவும் ஆச்சு

30. காவியும் 31. குறுகினது

தானமதா அறியாத சங்கமர்கள் தன்மகிமை
யேதுமறி யாப்பேதை எனக்கறிய வசமோ!

அத்தருரு வானதொரு சித்தசங் கமர்மகிமை
சற்றுமறி வில்லாதார் தான்காண வசமோ!

உம்மைப்போல் சங்கமரை ஒருநாளுங் கண்டதில்லை
எம்மைக்கேழ்க்கும் பொருள்தன்னை இனிக்கேளும்
ஐயா!

எவர்என்ன கேட்டிடினும் ஈந்திடுவேன் இவ்விரதம்
தவருமல் தந்திடுவேன் தான்கேளும் ஐயா

உயிர்கேழ்க்கி னும்தருவ துறுதியென் மனவிரதம்
செயலாக வேண்டுவது செப்பியிடும் ஐயா

திசைகளது பிசகியே சென்றிடினும் இரவியென்
வசனநெறி பிசகாது மானிலத்தின் தானே. (42)

**வசனம்**

வல்லாள ராசனும் மன வலிமையான வசனம் சொன்னவுடனே குமார சங்கமரும் அதிக சந்தோஷ மெய்தி சிறுநகையுடனே ஏதென்று சொல்லுவார் :

**திரிபுடை** **(பைரவி)**

சத்திய வசன நற் சற்குண சிகாமணி;
தியாகவா ருதியே நமக்கினி
மெத்தவே சந்தோஷ மாச்சுது; விளம்பக் கேளாய்.

பரம ரகசிய மான பொருளிது,
பலரு மறியவொண் ணாதசொல்லிது
அருகில் வந்திடில் உமக்கு நாமது,
அறிய உரைப்போம்.

அனங்கன் நூல்வழி அறிந்த பெரியோர்
அறிவர் அதன்பயன் பலரும் அறியார்.
மனங்களித்திடும் மாதரின்பமே—மனதுக்கின்பம்

காமவேதனை யாலும் மேவிய
பூமலர்க்கணை யாலும் வெம்பியே
நாமுமே யுமைத் தாமடைந்தது - ராசராசே.

கீர்த்தியாகிய பார்த்தி பாவினி
கிளர் விரகமும் தீர வின்றைய
இராத்திரிக் கொரு வேசி மாதரை—நல்குவாயே.

தேசம்புகழ் அருணு சலந்தனில்
வாச மாகிய தாசி மார்களுள்
நேச மாயொரு வேசி யருளுமென்—ஆசைதீர. (43)

வசனம்

இப்படிச் சொல்லும் குமார சங்கமரைப் பார்த்து வல்லாள ராசனும் ஏதெனச் சொல்லுவான்:

ஏகதாளம் (பிலஹரி)

அய்யனே ஏதிது அதிசய மாச்சுது
[32]பையவே நீரிப்போ சொல்லிய வசனம்

மாசறு சங்கமர் வஞ்சிய ராகிய
வேசியர் ஆசையை விரும்பிடு வாரோ?

மெய்ப்பொரு ளாகிய விமலா யீதொரு
அற்பம தாமிவை எப்படி யளிப்பேன்?

நல்லவ ரானவர் புல்லிய நெறிசொல்லில்
அல்லவென் ருல்நான் சொல்லுவ தென்ன?

ஈதொரு பொருளாய் எண்ணியே கேட்டிடில்
ஆதியே நான்சொல்ல யாதொன்று முண்டோ?

சொர்னமும் ரதகெச துரகமும் அவனியும்
இன்னவை தன்னிலும் இதுவோ பெரிது? (44)

32. துய்யவே

### வசனம்

பின்னும் வல்லாள ராசன் மனஸ்தாபமுடனே மறுத்து ஏது சொல்லுவான்:

**சம்பை** **(வராளி)**

அரும்பொருளைக் கேளாமல் அய்யனே வேசியரை
விரும்பியொரு பொருளாக விளம்பியென்னைக் கேட்டீர்

பொன்னுசைப் படுமந்தப் பொதுமாதர் தங்களுக்கு
என்னுசைப் பட்டுநீர் இப்பொருளைக் கேட்டீர்

மருள்காட்டிக் காமுகரை வலிதழிக்கும் விலைமாதர்
வரக்காட்டும் என்னவே வாய்திறந்து கேட்டீர்

இரவுபகல் அனுதினமும் மருவிளவ ரையும்தழுவும்
தெரிவையெனும் வேசியரைத் தேடியென்னைக்
கேட்டீர் (45)

### வசனம்

இப்படி வெறுத்துரைத்த வல்லாள ராசாவின் முகத்தை நோக்கிக் குமார சங்கமர் சினந்தவரைப்போல அங்கு ஏது சொல்லுவார்:

### திபதை

ஏதுவல் லாளநீ இப்போ துரைத்த
நீதி விசேஷத்தின் நிலைமை நன் ருச்சு

மாதர்கள் இன்பத்தை மனதி லிச்சையதாய்
நீதரு வாயென்று நினைந்துவந் தோம்நாம்

ஆர்துறந் தாரடா அறிவையர் தன்னைச்
சீர்புனைச் சடைமுடி சிவன்முத லாக

சங்கரன் கங்கையைத் தலைமிசைச் சுமந்தான்
செங்கண்மால் உரமிசைத் திருவினைத் தரித்தான்

நான்முகன் வாணியை நாவினில் மறைத்தான்
மான்மகள் வள்ளியை வணங்கினுன் முருகன்

சந்திரன் தன்குரு தாரத்தைச் சேர்ந்தான்
இந்திரன் அகலிகையை ஏன்புணர்ந் திட்டான்

கவுசிகன் ஊர்வசி காதலேன் கொண்டான்
பராசனும் மீன்வலைப் பாவையே னணைந்தான்

வதிஷ்டனுர் சக்கிலி மாதையேன் புணர்ந்தான்
இடைச்சியர் தன்னைமால் இணங்கியே னணைந்தான்

தவங்களும் வேள்வியும் தான்செயல் மார்பும்
புவியில்வாழ் அரம்பையர்தன் போகத்துக் கலவோ

செகமிசை தற்பரர் சங்கமாய்ச் [33]செழித்த
சகலமும் சத்தியின் தன்மய மாகும்

இதமறி யாமல்நீர் இகழ்ச்சியா யுரைத்தீர்
மாதர்கள் இன்பம்போல் மற்றுவே றுளதோ

கேட்டவை யளித்திடும் கீர்த்திமான் என்று
நாட்டமாய் வந்துன்னை நாமிது கேட்டோம்

இல்லையுண் டென்பது இரண்டினில் ஒன்று
சொல்லினுல் வரும்வழி தொடங்கிஏ கிடுவோம்

வல்லாள னேஒரு மாத்திரைப் பொழுதுநின்
எல்லையில் இருந்திடேன் என்றுரைத் தனரே. (46)

**வசனம்**

இப்படி குமாரசங்கமர் சினந்து எதிர்த்துரைத்த வசனங் கேட்டு வல்லாள ராசனும் பயந்து எழுந்து வணங்கி அங்கு ஏதுசொல்வான்:

**சம்பை** **(கேதாரகௌளை)**

சித்தரே அறியாமல் சிறியனுன் உரைத்தபிழை
குற்றமது பொறுத்தென்னைக் கொண்டாள வேணும்

33. செய்த

இந்நேர மேயேகிப் பொன்னுன மேனிவிலே
மின்னுரை யான்தருவேன் என்றே நவின்ருன்

பூணுரம் பூண்டமுலே பொருந்தளித்து அமளிதனில்
நாணுத வேசியரை நான் தருவேன் என்ருன்

அதிரூப மானதொரு பொதுமாதர் தனையிப்போ
எதிராக வேகொணர்ந்து ஈந்திடுவேன் என்ருன் (47)

அடதாளம் (யதுகுல காம்போதி)

மன்னனே வல்லாள ராசனே மகிழ்ந்து கொண்டோம்
உண்மையா யின்னமொன் றுளதுரைப்போம்
இசைந்து கேளாய்
மடந்தைப் பருவமதாகி கலவிகளறிந்து பின்னும்
வேருெரு
இடத்தினிற் பொருள் வாங்கிடாமல் இருக்க வேணும்

தந்த பணயமும் வந்து நாயகன்
தொந்த மாகத் தானிருந்திடும்
அந்த மாதரை இந்தஇரவினில் அணைந்திடோமே.

கருப்புச்சிலே மதன நூல்படித் திசை
கற்றுநன்ருய் மருவிடும்
விருப்பம் அறிந்திடும் வேசியரைநாம்
விரும்பிச் சேர்வோம்

சவிகை யாலொரு வேசிமாதரைத்
தந்திட்டாலும் அவளுடன்
கலவி செய்துற வாடி மருவேன் விருது கண்டாய்.(48)

வசனம்

இப்படி குமார சங்கமர் சொல்ல வல்லாள ராசனும் சம்மதமாக இசைந்து தேவரீர் மனதுக்கு ஒப்பும் படிக்கு வேசியரைத் தருகிறேன் என்று வெளி [34]ஆசாரத்திலே வந்து, தூதரை அழைத்து ஏதெனச் சொல்லுவார் :

34. கூடத்திலே

சம்பை (குந்தலவராளி)

மேதினியை ஆள்அரசன் தூதர்களை நோக்கிவிலை
மாதர்களை ஓடிப்போய் அழையு மென்றான்

முன்பணயம் வாங்கியொரு அன்பருடன் [35] அறியாத
தன்பருவ வேசியரைத்தா னழையும் என்றான்

மனையா யிரங்களினும் கனிவாக வேதேடி
தனியாக இருந்தவரைத்தா னழையும் என்றான்

கடிதாக வேஓடி துடியான இடைமாதர்
அடவான பேரையிங்கே அழையு மென்றான். (49)

வசனம்

இப்படி வல்லாள ராசனும் தூதர்களை வேசியர் வளவுக்கு அனுப்புவித்துக் குமார சங்கமருக்கு அறு வகை ருசிப் பதார்த்தங்களும் அரிசி, பருப்பு, ஆவின் பால், நெய், பால், தயிர் அடைக்காய் முதலானதுங் கொடுத்து சிவபூசைக் கிடமானதும் நைவேத்தியச் சரக்கு விபரங்களும் அமைத்துப் பின்பு வசந்தமணி மண்டபத்திலே எழுந்தருளி இருக்க வைத்து, விசிறி, வெண்சாமரை, பகல் விளக்கு வைத்து, சுவாமி! தேவரீர் நித்திரை ஆயாசம் அனந்தல் தெளிந்து எழுந்தருளி யிருங்கள். சுவாமி! மகா தேவரீர் அடிமைக்குக் கட்டளை ஊழியம் இராத்திரி காலத் துக்கு அப்படி இசைந்து அனுப்பி வைக்கிறேன் மகாதேவரீர் என்று வணங்கி, விபூதியும் கட்டளை பண்ண அந்தப்படிக்கு வாங்கித் தரித்துக்கொண்டு, தன் அரண்மனைக்குள்ளே எழுந்தருளினான்.

35. இல்லாத

திரிபுடை (ஆரபி)

நடந்துவீதிகள் கடந்துதூதுவர்
மடந்தைமாருறை அடர்ந்தமனையெலாம்
தொடர்ந்துபார்த்தனர் புருஷர்அங்கங்கே
தோணக்கண்டனர்.

வேசிமார்மனை ஆயிரங்களும்
விரைந்து பார்த்தாரவரவர்
கூசிடாதொரு புருஷர்தங்களைக் கூடியிருந்தார்

கண்டதூதுவர் மீண்டுகாவலன்
கழலில்பணிந் தேமொழிகுவார்
ஒண்டியாயொரு வேசியாரையுங் கண்டிலோமே.

தேடியாயிரம் வீடுவாசலும்
திரிந்துபார்த்தோம் அவரவர்
நாடிபுருஷரை கூடியிருந்தனர் ராசராசே. (50)

வசனம்

தூதரான பேர்கள் வல்லாள ராசனுடனே சொல்லியது; வாருமையா ஆண்டவனே வேசியர் வீதிகளும் வீடுகளும் ஆராய்ந்து பார்த்தோம். அவரவர் புருஷருடனே மேவி சரச சல்லாபத்துடனே இருக்கிறார்கள். புருஷரில்லாமல் தனியானபேர் எவரையுங் காணோம் என்று சொல்லக் கேட்டனன்.

அர்த்தசந்திரிகை

தூதுவர் இப்படி சொல்லிய போது
காதுறக் கேட்டனன் காரியம் இதுவென
அதிசயம் இதுவென ஆச்சரி யந்தான்
மனைதொறும் நாயகர் வந்தவர் இருந்தால்
இனிஎந்த வேசியை ஈந்திடு வோம்நாம்
மனக் கருத் திதனால் வழுவுதல் வருமோ
ஏதுசெய் வேனினி என்னவென் றுரைப்பேன்
ஆதியே சிவசிவ அருணா சலனே! (51)

### வசனம்

வல்லாளராசனும் மனவியாகுலமாகி மந்திரியுடனே ஏதெனச் சொல்லுவான் :

ஏகதாளம் (சாவேரி)

தந்திர மானது எந்தனுக் குரைசெயும்
மந்திரி யேயொரு விந்தையே நீகேள்!

இதுஇது விரகென துதிபெற உரைசெயும்
மதிமந் திரியொரு அதிசயம் நீகேள்

இன்ருெரு சங்கமர் ஈசனைப் போல
வந்துமின் ருெருவேசியை விரும்பியே கேட்டார்

பரிவுடன் ஒருவர்கைப் பணயங்கொண் டாலந்தத்
தெரிவையர் தம்மொடு சேருவ தில்லையாம்

மடந்தையர் ஆயிரம் மதனகலை நூல்களும்
அறிந்தவள் ஆனுல் அனுபவிப் பாராம்

இப்பதி வேசியர் எவர்களும் பணயங்கொண்
டப்பொழு தவரவர் அமளிநன் றினராம்

வந்தசங் கமர்க்கினி வாகுள வேசியை
யணைந்திட ஈவது என்றுரை செய்தான்

கொற்றவன் இப்படிக் கூறிடக் கேட்டு
புத்தி மந்திரியும் புரவலர்க் குரைப்பான் (52)

### திபதை

கொற்றவா நீயிது கூறிய புதுமை
இற்றைநாள் தனிலே எவர்சொல்ல அறியோம்

ஏதெவர் கேழ்க்கினும் ஈந்திடும் விரதம்
மாதவம் பூண்டனே மன்னவா இதற்கு

மனதுசஞ் சலமுற வாகுமோ வாகா
நினதுமா தவம்குறை நேருமோ நேரா

சங்கரர் சோணேசர் தம்மரு ளாலே
இங்கிதற் கிடையூறு இனிவார தில்லை

ஏகிநாம் இப்பொழுது இந்தவூர் எங்கும்
தோகைவே சியர்க்கிதம் சொல்லியே மனது

பொருந்திடப் பொருள்களும் பூஷணம் அளித்து
வந்திடும் சங்கமர் மனமெலாங் களிக்க

அரைக்கணம் தன்னிலே அழைத்துநான் வருவேன்
மிகுத்திடும் சிந்தையில் விசாரம்செய் யாதே

என்றுரைத் தமைச்சனும் ஏகியே நடந்து
சென்றுவே சியர்உறை தெருவில்வந் தெய்தி

வேசியர் தமையெலாம் வினவியே அழைத்து
மாசறு சங்கமர் மாற்றமும் உரைத்து

இரவினுக் காயிரம் எவர்களும் தந்தால்
பரிவுடன் நாம்பதி னாயிரந் தருவோம்

இதுவல்லால் வரிசைகள் எத்தனை பெறலாம்
சதிருடன் ஒருவர்நீர் தான்வரல் வேண்டும்

வஞ்சிய ரேயென மந்திரி தானும்
கெஞ்சியே கேட்டிடக் கிளிமொழி மாதர்

என்செய்வோம் பணயங்கள் யாவரும் கொண்டோம்
அஞ்சுவோம் இத்தினம் அமளியில் வந்த

நாயகன் தனைவிட நமக்கடுக் காது
ஆயனே யெங்களால் ஆவதொன் றுண்டோ

இத்தினம் கழிந்திடில் யாவரும் நாளை
அத்தினம் தேவரீர் அருள்படி செய்வோம்

இப்படி வேசியர் இரங்கியே மொழிய
தற்பர னிடத் தன்செயல் எனவே

அமைச்சனும் மீண்டுதான் அரசனைக் கண்டு
சிவன்செய லோவிது தெரிந்திட வில்லை

வேசியர் உள்ளதோர் வீடுகள் எல்லாம்
ஆசைசேர் காமுகர் அமளியில் இருந்தார்

எந்தனால் ஆவதே எவ்விதம் என்று
தன்தலை சாய்த்தவன் தானிருந் தனனே

மந்திரி யுரைத்த மாற்றமே கேட்டு
சிந்தை தயங்கித் திகைத்தவன் சொல்வான். (53)

வசனம்

இவ்விதம் என்று மந்திரி உரைத்த மாத்திரத்திலே அரசன் கேட்டுச் சிந்தை தயங்கித் திகைத்து அவன் ஏது சொல்வான்:

திரிபுடை (நாதநாமக்கிரியை)

மந்திரி சொல்லிய வசனம் கேட்டனன்
மனது சஞ்சல மாகித் துயருடன்

சிந்தை வியாகுலம் ஆகி மன்னனும்
திகைத்து மொழிவான்;

என்ன காரணம் என்ன அதிசயம்
என்னமோவிது என்று மனதினில்

வன்னி தனில்விடு மெழுகதாகவே மறுகினனே
என்ன மாகினும் ஏது விளையினும்

ஈசனார் செய லேயல் லாவினி
தன்னி லாவது வேறுண்டோவெனத்
தளர்ந்து சொல்லுவான். (54)

**வசனம்**

பின்னும் மனது நொந்து அருணாசலேஸ்பரரை நினைந்து ஏதென்று மெலிவான்:

**தரு** (பூர்வி கல்யாணி)

வேதனும் மாலும் அறியாத சோணாசலேசா
மேதினியோர் எவர்களும்வந்து சோணேசா

ஏதேது கேட்டாலும் ஈந்திடவே சோணேசா
எந்தன் மனத்தில் விரதங் கொண்டேன் சோணேசா

வல்லமையால் வந்து கேட்ட பொருள் சோணேசா
இல்லை யென்னாமல் இன்னாளும் அளித்தேன்
சோணேசா

இப்படி யல்லல் படுத்தவோர் சங்கமர் வந்து
சோணேசா

அன்புள வேசியர் இன்பத்தை நாடி சோணேசா

வஞ்சிப்பருவ மடந்தை யாருக்குச் சோணேசா
மற்றொரு நாயகர் இன்றியிருக்கச் சோணேசா

கொஞ்சியே அவளையுங் கூட்டிடவே சோணேசா
கூறியே கேட்டனர் ஓர்இரவுக்குஞ் சோணேசா

இதுவரி தோவென்று யான்இசைந்தேன் சோணேசா
இப்பதி யாயிரம் வேசியருக் கெல்லாம் சோணேசா

சதிருடன் பணயங்கள் தான்மிகக் கொண்டு
சோணேசா

தான்வரு நாயக ரோடுற வானார் சோணேசா

எங்கெங்குந் தேடினேன் இனியென்ன செய்வேன்
சோணேசா

பங்கமாய்என் விரதம்ஈ தாகுமோ சோணேசா.

சங்கமர் வந்தெனைத் தானிது கேழ்க்கச் சோணேசா
சத்திய வசனமும் தப்பவுமானேன் சோணேசா

வேசியருக் காயப கீர்த்திக்குள் ளானேன்
சோணேசா
வேந்தர்கள் முன்தலை சூழ்ந்திட லானேன் சோணேசா

நின்னரு ளேதுணை யென்று இருந்தேன் சோணேசா
என்னையிரட்சித் திப்போ ஈடேற்றுவாய் சோணேசா
(55)

வசனம்

இப்படி வல்லாள ராசன் மனம் மெலிந்து இருப்பது கண்டு மந்திரி தேற்றி ஏதென்று சொல்லுவான் :

சம்பை (செஞ்சுருட்டி)

நெறிமுறைமை பலவறியும் நிருபனே ஏதொன்றும்
அறியாது போல்மனது துயரமுற லாமோ

பெரிதான தொருவிரதம் பிடித்துமனஞ் சிறிதாகப்
பரிதாப முடன்வெருவிப் ... யிட லாமோ

கோடான கோடிதினம் நாடாது நாடிவர
வாடாமல் அளித்தமனம் வாடியிட லாமோ

குலமாதர் தனைக்கொடுக்க அரிதாகும் இப்பொழுது
விலைமாதர் தனைக்கொடுக்க விதனமுற லாமோ

பணவாசைப் படுமந்த பாவைவே சியர்தமக்குத்
தணியவே பொருளளித்துத் தானழைத்தா லுறுதி

அருஞ்ச லேசரிட அருட்செய லலாமலே
நெறியாக வேறொன்றும் நேரிடுவ தில்லை

நெடிதான பொருள்கொண்டு படிமீதில் வேசியரை
அடவாக வேதேடி அழைத்துவரு வோமே. (56)

### வசனம்

இவ்விதம் மந்திரி தேறுதல் உரைத்து அரசனுடனே பொருள்பல கொண்டு தெருவுகள் எல்லாம் தேடிப் பார்த்து வருகலுற்றனர்.

திரிபுடை (தோடி)

பரியிலேறியே அரசனும்வெகு
துரிதமாகத்தன் புரியிலுள்ளதோர்
தெருவிலேகியே வேசிமாதரைத்
தேடலுற்றான்.

திருத்தமாகிய அருணைமாநகர்
தலத்தில் வாழ்பொது மாதர் மனைதோறும்
வருத்தமாகவே போந்து அவர்களை
வருந்திச் சொல்லுவான்

அன்னமேஅப ரஞ்சியேமணி
சொர்ணமேகுயில் தோகைமயிலே
இன்று நானொரு சொன்னமொழிகேட்
டிரங்கவேணும்

வந்துகேட்டது ஈகுவேனென
மனதிலேயொரு விரதம் பூண்டனன்
இந்தநாளொரு குமார சங்கமர்
எய்தவந்து

விரகமாகியே பருவவேசியைத்
தருகவென்றனர் ஆகையாலுனை
வருகவென்றழைத்திட வந்தோமினி
வந்திடீரே. (57)

வசனம்

பின்னும் ஏதென்று சொல்லுவான்:

சம்பை (அடாணு)

நாடிவந்த சங்கமரைக் கூடிவரு வார்தமக்குக்
கோடிபொன் இப்பொழுது
கொடுத்திடுவேன் நானே

பேச்சுரை தப்பாமலே பிரியமுடன் வந்தவர்க்கு
ராச்சியமெல் லாமளித்து நல்கியிடு வேனே

உபகார மாகவே உதவிசெய்த பேர்களுக்குச்
சபையறிய வேண்டுவது தானளிப்பேனே

சங்கமரைக் கூடியே தானணைந்த பேர்களுக்குப்
பொங்கமுடன் பொக்கிஷங்கள் போதவிடு வேனே

இப்பொழுது என்விரதம் இடருமல் வந்தவரைத்
தப்பாமல் என்னுளும் தான்மறக்கி லேனே. (58)

வசனம்

இப்படி வல்லாள ராயனும் இரக்கமாய் மொழிய வேசியர் பயந்து ஏதெனச் சொல்லுவார்கள்:

திபதை

இப்படி மன்னனும் இரக்கமாய் மொழிய
அப்பொழு தரிவையர் அதிர்ந்துமெய் நடுங்கி

மதனசிந் தாமணி மகிழ்சித்திர ரேகை
அதிரூப வல்லியர் ஆருயிரம் பேரும்

கால்நடுங்கிக் கரங்கட்டி வாய்புதைத்து
ஞாலமெல் லாம்புகழ் ராசகெம் பீரா

நாயினுங் கடையேமை நயந்தொரு பொருளாய்
வாயுறப் புகழ்ந்தெமை வருந்திட லேது

தேவரீர்க் கடிமையாம் திருவருள் படிக்கு
ஏவிய தொழிலினுக் கிசைவதே யல்லால்

மற்றுவே றுளதோ மன்னனே உமக்குத்
தோன்றிய துயரெங்கள் துயரமன் றேதான்

நாடுராச் சியங்களும் நல்குவேன் என்றும்
கோடிபொன் பூஷணம் கொடுக்கிறேம் என்றும்

தங்கள்தம் அடிமையாம் தாசியர் ஆன
எங்களுக் கிதம்பெற இயம்புவ தேது

ஏதுதான் கொற்றவா இப்படி யுண்டோ
ஏதுகா வலனேநீர் என்னதான் நினைந்தீர்

வருகெனக் குள்ளர்க்கு வழங்கினுல் வந்து
மருவிசங் கமருடன் மகிழ்ந்திட விருப்போம்

மோகமாய் நாயகர் முன்பொருள் ஈந்தார்
ஏகிவந் தெய்தினுர் எவர்மனை தனிலும்

ஆகையால் தாமச மாயிருந் திட்டோம்
ஏகிவந் திடவருள் ஈந்தஇப் போது

புர்வலர் நீரும் புகன்றசொற் படியே
திறமுடன் செயலென் செப்பிநின் றனரே. (59)

**வசனம்**

இப்படி வேசியர் அடங்கலும் சொல்லி நின்றவுடனே வல்லாள ராயனும் ஒரு உத்திரமும் சொல்லாமல் எழுந்து [36] அந்தக்ஷணமே [37] தன்னரண்மனை வந்து சிறிதுபேர் அரக்கர்களை வரவழைத்து நாலு திக்கிலுஞ் சென்று ஒரு வேசியை அழைத்துக் கொண்டு வரச் சொல்லி திட்டம் பண்ணி, கொண்டுவந்த பேருக்கு உம்பளிகை, உடுக்கறை பண்ணிவிப்பேனென்று கட்டளை பண்ணி அனுப்பிவித்து, அவர் வருகிற

36. நிமிட்டிவிழியளவிலே 37. ஆஸ்தான மண்டபம்

பரியந்தமும் தன் மனசிலே விசாரத்துடனே தன்னிலே தானே என்ன சொல்லுவான்:

### அர்த்த சந்திரிகை

சிவ சிவ வென்றவன் சிந்தையில் நினைந்தே
தவமவம் ஆமெனத் தான்மிக நினைந்தே
ஏதுசெய் வேனென வெண்ணியே நாடி
[38]காதலர் கமலத் தன்முகம் வாடிட
கீர்த்தியில் லாதப கீர்த்திக்குள் ளானேன்
[39]பார்த்திபர் நகைத்திட பழிப்புக்குள் ளானேன்
அருணு சலரிட அருளிது தானோ!
கருணைசெய் யாதென்ன காரணந் தானோ
நீதியில் லாத அநீதிசெய் தேனோ
தீதுகள் ஆனது தீம்புசெய் தேனோ
தலையிலே எழுதிய தன்பயன் இதுவோ
பல பல விதம்சொல்லிப் படுந்துயர் வசமோ. (60)

### வசனம்

இப்படி சிந்தாக் கிறந்தநாள் திகைத்திடும் போது, பொழுது போந்து இரண்டு நாழிகை யாச்சுது; நாலு திசைக்கும் போன தூதுவர் பதிங்காதவழி மட்டுக்கும் திரிந்து வேசியர் எங்கும் கைவசமாகாமல் ராசாவினுடனே சொல்லக் கேட்டு மனம் திடுக்கிட்டு மூர்ச்சித்திருக்க அந்த வேளையிலே குமார சங்கமர் சித்தாண்டிப் பயலை அனுப்பிக் கேட்டுவரச் சொல்லி அனுப்ப அவனும் வந்தங்கே ஏது சொல்வானெனில்:

### கலித்துறை

மின்காதல் கொண்டந்த சங்கம தேவர் மிகவருந்தி
கொங்காமல் வந்திடும் [40]கங்கையும் திங்களும்
கூடியேவர

38. தாதலர் கமலமெனத் 39. பார்த்தபேர் 40. கங்குலும்

தன்காதல் தீர்மின்னூர் தனைச்சேர்ந்து
தழுவியிட எங்கே
யிடமவர்க் கிங்கே எனச்சொல்லி இயம்பி னூரே.
(61)

**வசனம்**

இப்படி, சித்தாண்டிப் பயல் கேட்டவுடனே வல்லாள ராசனும் உயிருக்குயிராகிய மனைவியர் இருவரிலே ஒருவரை தாசி வேஷமாய் அலங்கரித்து அனுப்புகிற தென்றதை யல்லாமல் இனி வேறொன்றும் நேரிடுவ தில்லை என்று நிச்சயித்துத் திடசித்தனுய்த் துணிந்து அங்கே ஏது சொல்லுவான்:

**சம்பை** **(மோகனம்)**

பரமகுரு பரனை குமாரசங் கமர்தன்னை
அரைநாழி தனிலேவந்து அழைத்து வருவேன்
வாசமல ரணைமீதில் வேசியரைச் சேர்ந்திருக்க
நேசமுட னழைக்கஇப் போது வருவேன்
மருவணையில் வஞ்சியரை மகிழ்ந்தணைய அவர்தம்மை
ஒருநொடியில் அழைக்கநான் ஓடி வருவேன்
சொன்னபடி எல்லாம் சுபமாக அனுகூலம்
இன்னபடி என்றுநீர் இயம்பியிடும் என்றூன்.
(62)

**வசனம்**

இவ்விதம் சொல்லிச் சித்தாண்டிப் பயலை அனுப்பித் தானும் சபையிலிருந்த மந்திரிகள் முதலான பேருடனே சொல்லாமல் எழுந்திருந்து அதி சீக்கி ரத்திலே அந்தப்புரத்திற்குப் போகலாயினன்.

திரிபுடை (புன்னாகவராளி)

உரைத்த மொழியது தவறினல்நமை உலகுளோர்
நகைப்பா ரல்லாமலும்
வருத்த மாகிய நரகமானது வந்துசேரும்
மங்கை வேசியர் அனைவரும் பொருள்
வாங்கி நாயகரொடு மருவினர்
எங்கிலும் கிடையாமல்
போயினல்நான் என்னசெயவென
இனிச்செயும் செயல்ஏது
சங்கமர்க் கில்லையென்றுரை
சொல்வதிலுமுயிர் தனைத்துறந்து
இறந்துவிடிலது தன்மையில்லை
இறந்துவிடில்தவம் அழிந்துவிடும்
கதியேயதுவுங் கிடையாது
சிவன்செயலறிந்து தெரிந்திடஎவக்கும்
வசமோ அரிதுதானே. (68)

வசனம்

இப்படி, மனது மகா வியாகுல சிந்தையுடனே அரண்மனையான அந்தப்புரத்திலே போய் நா வரண்டு, நெஞ்சு உலர்ந்து, முகமவாடி, உருமாறி விசாரமுடனே இருக்க, பிராண நாயகியாகிய சல்லமாதேவி மல்லமாதேவியர் இருவரும் கண்டு பயந்து ஏதெனச் சொல்லுவார்கள் :

சம்பை (கானடா)

மன்னனேஎன் பிராணநாயகா! மனந்தனக்கு
என்றுமில்லாததுயர் இன்றுவந்ததேது
மாற்ருர்கள் படையெடுத்து வந்தார்களோ கரத்தை
ஏற்ருர்க்குக் கொடுக்கபொருள்
இல்லாமல் போச்சோ

செய்யாத தீமைதனைச் செய்தார்களோ சனங்கள்
பொய்யாத மழைமறுத்துப்
பெய்யாமல் போச்சோ

குடிபடைகள் மனதுதனில் குறைகள்சில வந்ததோ
படிமீதில் பயிர்விதைகள் பழுதானதோதான்

நாதர்அரு ணேசருக்கு
நடக்கும்படித் தானந்தன்னில்
தீதாக வேகுறை செய்தார்க ளோதான்

இல்லாத பொருள்கேட்டு இல்லையென்றும் வாயினுல்
சொல்லாமல் இங்குவந்த துயரமோ உமக்கு

வாராத துயருமக்கு வந்திடுவதேன் இப்போ
தீராத துயர்எனக்குத் தெரியஉரைப் பீரே. (64)

வசனம்

சல்லமாதேவி, மல்லமாதேவி இருவரும் பிராணநாயகரான வல்லாள் மகாராசனைத் தொழுது வணங்கி, என்றுமில்லாத மனத்துயரம் யாது? என்று கேழ்க்க மன்னவன் வாய்திறந்து சொல்வதாயினுன்.

ஏகதாளம் (இங்தோளம்)

என்னிட மனந்தனக் கிசைந்தபெண் கிளியே
என்னிட உயிரே என்குலக் கொழுந்தே

ஒன்ருய் உயிர்உடல் ஓரிரண் டாகியே
கண்ணே அருந்ததி கற்புடை யாளே

இன்றுஎன் மனத்தினில் எய்திய துயர்தனை
உன்னுெடு உரைசெய்வேன் உகந்துநீ கேளாய்

வந்தொரு சங்கமர் இன்றிர வினில்ஒரு
சுந்தர வேசியைத் தந்திடும் என்ருர்

மடந்தையர் ஆகிய மதனநன் னூல்களும்
தெரிந்தவ ளாயவள் இருந்திட வென்றார்

மற்றொரு வர்பொருள் வாங்கிடில் அவள்தனை
நத்துவ தில்லையிது சத்தியம் என்றார்

என்றவர் மொழிந்திட இதுவரி தோவென
நன்றென இசைந்தனன் நற்சபை தனிலே (65)

வசனம்

பின்னும் ஏதெனச் சொல்லுவான் :

அடதாளம் (காம்போதி)

இசைந்து நம்பதி அடைந்தவேசியர் யாவர்களையும்
வருந்தியேபெருந் தனங்கொடுத் தழைக்கில்முன்
பொருள்போத வாங்கி

மனைக்கு மனைக்கொரு புருஷராகவே
வந்திருந்தார் தூதர் தான்

கனக்கவெளி யேபுரந் தேடித்தேடி காணுமல் வந்தார்
இரவுமாச்சுது வேசியொருவரும் காண்கிலோமே

என்னசெய்குவோம் விரகமாய்வரும்
சங்கமருக்கென்ன விளம்பியிடுவோம்

எந்தன்விரதமும் எந்தன்மானமும்
இன்றுடன்அவ மாகிப்போச்செனு

சிந்தை தான்துயர் ஆகிமன்னனும்
செப்பினனே. (66)

வசனம்

இப்படி மனது நொந்து தளர்ந்து உரைத்த மகிழ்நனை
நோக்கிச் சல்லமாதேவி, மல்லமாதேவியர் இருவரும்
ஏதெனச் சொல்லுவார்கள்:

### திபதை

புரவலன் இப்படிப் புகன்றிடக் கேட்டுத்
தெரிவையர் இருவரும் சிந்தைதான் கலங்கிக்
காதலன் தன்துயர் கண்டுதான் வெருவி
ஏதுசெய் வோமென எண்ணுது மெண்ணி

கணவனை நோக்கியே கற்பினில் மிகுத்த
குணவதி முதல்வரும் கொம்பனை மொழிவாள்
ஏதுநீர் கொற்றவா இப்படி மனது
தான்சலித் தேமிகத் தளர்ந்திட லாமோ

பிடித்திடும் விரதமே பிழைகளும் வராமல்
அடுத்திடுங் காரியம் அவஞ்செய்தி டாமல்
துணிவதே பயனலால் துயரமுற் றிருந்தால்
தணியவோர் செயல்தா னுவ துண்டோ

வருஞ்செயல் வந்திடும் வாராது வாராது
செயுஞ்செயல் செய்திடில் தெய்வமும் துணையாம்
நமக்கிது நலமதோ நாட்டில்முன் அரசர்
தமக்குவந் திடில்மனம் தளர்ந்தன ரோதான்

வாக்கினல் உரைத்திடும் வசனம்தப் பாமல்
காக்கும்அ யோத்தியைக் கவுசிகர்க் கீந்து
மறையவன் கையிற்சந்திர மதியையும் விற்றுப்
பறையனுக் கடிமையாய்ப் பாரெலாம் அறிய

இருந்தனன் அரிச்சந்திரன் இதுவுமல் லாமல்
நளன்சனி மகிமையால் நாடெலாம் இழந்து
இளங்கொடி மனைவியை இரவினிற் பிரிந்து
அறுசுவை ஆக்கியோர் அரசன்கீ ழிருந்தான்

தஞ்சமென் றடைந்திடும் தனிப்புரு வினுக்காய்
அஞ்சிடாது [41]சென்மத்தை யறுத்தவன்
கொடுத்தான்
தரணியாள் சிபியெனும் சக்கர வர்த்தி
மானிலம் புரந்திடும் மாபலி [42]வாணன்

41. துடைசதை 42. அரசன்

தானும்மூ வடிநிலம் தானுமே கொடுத்து
தரணியை விட்டவன் தளையது பூண்டு
சிறைதனில் இருந்திடும் செயலறி யீரோ
நாயகன் ரவிகுல இராகவன் தானும்

தாய்மொழி வசனமே தப்பொணு தென்று
வாசமாய் வனந்தனில் மனைவிசீ தையைத்தான்
ஆசையாய் அரக்கன்கை அகப்பட வில்லையோ
பஞ்சவர் துரியனுர் [43]பதியெழச் சூதால்

வஞ்சிதுரோ பதையுடன் வனமெலாம் திரிந்து
துஷ்டகீ சகன்கையில் துரோபதை சிக்கி
பட்டபா டதுசொல்லப் படாது மன்னனே
செங்காட்டில் வாழ்ந்திடும்
சிறுத்தொண்டன் தானும்

மங்காமல் பிள்ளையை வாளினுல் அரிந்து
சுவைக்கறி யாக்கியே சிவனுக்கே அளித்தான்
குவலயந் தனிலின்னங் கோடிபேர் உண்டு
மனக்கருத் தழிந்திடா வகைசெய்த பேர்கள்

எனச்சொலப் பின்வரும் ஏந்திழை மொழிவாள்
ஞானமும் நெறிகளும் நடந்தமு துரைகளும்
ஆனவை மகிழ்நநீர் அறியாதும் உண்டோ
காந்தன்தன் சொற்படி கருதிய பேர்க்கு

நேர்ந்திடுங் கதியவர் நீள்நர கடையார்
முன்னமே பாண்டுதன் மொழிப்படிக் கேட்டு
பெண்கொடி குந்தியும் பிறர்தமைச் சேர்ந்து
மைந்தரை ஈன்றனள் மகிழ்நனே யந்த

குந்தியை இகழ்ச்சியாய் குறைசொன்னுர் உளரோ
சந்திர மதிதனைத் தான்விலை செய்தான்
அந்தஅரிச் சந்திரனை யார்பிழை சொன்னுர்
தாரத்தை விற்கவும் தான்மீட் டிடவும்

43. படுத்திய

நேரத்தால் ஆக்கினை நிமிஷத்தில் இடவும்
ஆளரா னவருக்கு யாவையுஞ் சொல்லி
ஏளித மாகவே இனிவிர தத்தை
மெய்யினில் துயர்கொண்டு விட்டிட வேண்டாம்

செய்யவே சிந்தையைத் தெளிந்துதான் கொண்டு
சஞ்சலம் தனைவிட்டுச் சங்கமர் தன்னை
இன் சொலா லழைத்திட ஏகுமென் றனளே. (67)

வசனம்

இப்படி, தேவிமார் தைரியஞ் சொல்லக் கேட்டு மனங் களித்துச் சொல்லுவான்:

சம்பை (நாடகுறிஞ்சி)

என்மனதில் எண்ணிநான் இசைந்தபடி யேநீங்கள்
அன்புடன் இசைந்தது என்னரிய தவப்பலன்தான்

சொல்லாத சொல்தனக்கு தோகைநீர் மனமிரங்கி
தாள்ளாமல் இசைந்ததென் தவமகிமை தானே

அரிதான [44]விரதமும் அழிந்துபோ காமலே
பரிவாக இசைந்ததென் பாக்கிய மல்லவோதான்

பதியான பேர்தமக்குப் பாருலகில் உமைப்போல
இதமாக நடந்தபேர் எவருமில்லை தானே

செய்யாத காரியத்தைச் செயச் சொல்லும்
என் வார்த்தை
பொய்யாமல் போற்றுமுங்கள் பொறுமை
என்ன சொல்வேன்

கனிவாகச் சங்கமரைக் கலந்திரவில் மருவியுடன்
அனுகூல மாகியபின் [45]ஆரெனக்கு நிகரேதான் (68)

44. விரதமின்றழிந்து 45. மனது மகிழ்வேனுன்

### வசனம்

அறிவு மிகுத்த தெரிவையர் இருவரும் மருவியிட சங்கமரை ஒருமையானது கண்டு வல்லாள ராசனும் மனங்களித்து உள்ளம் பூரித்து, அளவில்லாத சந்தோஷத்தோடே கூடி, குமார சங்கம தேவரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டுவரப் போயினன்.

திரிபுடை (பிலஹரி)

மனது களித்துமெய்ப் புளகிதமாகியே
மரித்த உயிரது வந்தது என்னவே
கனத்த மகிழ்வுடன் ஏகிச் சங்கமர்
காலுறப் பணிந்தே
எந்தையே எழுந்தருளி வந்துநீர் அந்தமாகவே
சிந்தை மகிழ்வுறக் கந்தமலரணை மீதிற்சேர்ந்திட
வந்திடீரே.

விரக மாகிய காதல் தீர்ந்திட
பருவ வேசியை மருவ வேயினி
துரிதமாகவே இரவில் மனைக்குநீர் வருகுவீரே
நேரமாச்சுது கோபமானதை நீங்கியே
எழுந் தருளிவந்திடும்
யாருமறியாம லிருக்கவே இப்போ
அழைத்துப்போவேன். (69)

### வசனம்

இப்படி, வல்லாள ராசனும் குமார சங்கமரை வணங்கிப் பணிந்து இந்நேரஞ் சென்றதென்று கோபம் வையாமல் அடியேன் பேரில் தயவு வைத்து எழுந்தருளும் என்று வேண்டியழைக்க, அவர் ஏது சொல்வார் :

சம்பை (அடாணு)

இந்நேர மானபின் எனையழைக்க வந்தாயுன்
பின்னே நடந்துமனை புகுதவிடி வாகும்

முன்னேர மேநமக்கு மெல்லியரைச் சேருவது
பின்னேர மாகிவிடில் பெருந்தூக்க மயக்கம்

வந்தென்ன இனியங்கே மன்னவா இனிநாமும்
இன்னவிடத் திருந்தாலும் இனித்தூங்கி விடலாம்

ஆசைசொல்லி இந்நேரம் ஆனபிற கோவந்து
மோசமாய் அழைக்கவிது தோஷமா காதோ.
(70)

வசனம்

இப்படி, குமார சங்கமரும் கோபமாய்ச் சொல்வது கண்டு வல்லாள ராசனும் ஏதெனச் சொல்லுவான் :

ஏகதாளம் (ஆஹிரி)

ஆழியில் சூரியன் போயினி மூவிரு
நாழிகை யானது பாருமிப் போது
அரைநொடி தன்னிலே அழைத்துநான் போவேன்
விரகுட னேநீர் நடவு மென்றனன்

அகமகிழ் வாகிபுன் னகைமுக மாகியே
செகம்புகழ் சங்கமர் மிகநடந் தனரே
கள்ளம தாகமுக் காடது போட்டு
மெள்ளவே சங்கமர் வள்ளல்பின் நடந்தார். (71)

வசனம்

இவ்விதமாகக் குமார சங்கமரை வல்லாள ராசன் அழைத்து வருவதற்குமுன் சல்லமா, மல்லாமா தேவியர் இருவரும் புணர்ச்சிக் கிரகத்தைச் சார்ந்து

சவ்வாது குங்குமங்களினாலே மெழுகி பன்னீர் தெளித்து சம்பிரமாய்ச் சிங்காரித்துக் கட்டிலில் பஞ்சணை மெத்தை பரப்பி, திண்டு தலையணை இரத்தினக் கம்பளி முதலானதும் போட்டுச் சந்தனக் கிண்ணி, புனுகு, சவ்வாது, தம்பலவட்டில், காளாஞ்சி கண்ணாடி, மயில்விசிறி மற்றுமுள்ளதும் அடவாக வைத்து, முல்லை, மல்லிகை, இருவாட்சி, சண்பகம் பரிமளங்களும் வைத்து, குத்துவிளக்கேற்றுவித்து தாங்களும் மஞ்சனமாடிப் பட்டணிந்து, ஆபரணங்களும் கந்த கஸ்தூரிகளும் தரித்துக் கொண்டிருக்க, அந்த சமயத்திலே, குமார சங்கமரைச் சிங்காரித்திருக்கிற மஞ்சத்தின் பேரிலே எழுந்தருளும் என்று சொல்லி, வல்லாள [46]ராயனும் அந்தப்புரம் போய், தேவிமாரைப் பார்த்து ஏதெனச் சொல்லுவான்.

### திபதை

வஞ்சியர் இருவர்கள் மதிமுகம் நோக்கி
நெஞ்சினில் களிப்புற நிருபனும் மொழிவான்

வந்தனர் சங்கமர் மலரணை தனிலே
[47]அந்தமா யமளியில் அழகுறச் சேர்ந்து

இருவரில் ஒருவர்நீர் இசைந்துசங் கமரைச்
சருவியே அவர்மயல் தணிந்திட மருவி

வேசியர் தம்மிலும் விருவின்ப லீலை
பேசியே மதனநூல் பிசகுவா ராமல்

தழுவியே சம்போகம் தானவர்க் களித்துப்
பழுது வராமல் பயபக்தி உண்டாய்

சரச லீலைகள் இசைதனில் வரமகிழ்
உயர்வெலா மவர்மனம் இங்கிதப் படிக்கி

இருந்திடில் அதுநமக்கு இன்பமே யாகும்
அருந்ததி [48]கற்பினுள் அதிகமாய் விளங்கும்

46. ராசனும் 47. அந்த மாளிகையில் 48. கற்பினுக் கதிகமாய்

என்றுதான் மன்னவன் இப்படி மொழிய
இன்னவை கேட்டதோர் இளங்கொடி யான
மல்லமா தேவியும் மகிழ்ந்நே வணங்கி
சொல்லுவாள் தேவரீர் சொன்னசொற் படியே
இருந்துநான் புகழுமக் கெய்திட வருவேன்
திருந்தவே விடையருள் செய்திடீர் என்ன
அப்பொழு தந்தவோர் சல்லமா தேவி
செப்புவாள் காவலா சிறியமா திவளும்
மனக்கருத் தானதும் அறிந்தவள் அல்லள்
கனத்தமெய் நாணிடும் கலவியில் மருவும்
தகவினுல் ஏதொரு தப்புவந் திடுமோ
உகவினுல் ஏவிட யோக்கியம் அல்லாள்
அடியவள் ஏகியே அவர்தனைப் புல்கி
வடிவுடன் சங்கமர் மனங்களித் திடவே
செய்திடு வேனென தேர்ந்தவள் இசைந்து
பையவே என்னிலும் பதின்மடங் கவரை
உன்னித மாகவே உகந்துநீ அணைந்து
என்னிட விரதமும் ஈடேற்றுமென் ருனே. (72)

**வசனம்**

இவ்விதமாக வல்லாள ராசனும் சல்லமா தேவிக்குப் புத்தியாகத் தெரியச் சொல்லிக் குமார சங்கமரிடத்துக்கு அனுப்புவித்துத் தானும் தலைவாசல் அருகே படுத்துக் கொண்டிருந்தனன்.

**திரிபுடை** (வராளி)

தண்டை பாடகம் சிலம்பு நூபுரம்
சதங்கை சரிவளை அஷ்ட கடகமும்
கண்ட சரமொடு செவியில் கொந்தளம்-காந்தியுடனே

பட்ட காரையும் ஒட்டி யாணமும்
பருத்த கொங்கையில் முத்து மாலையும்
சுட்டி நவமணி பட்டுச் சேலையும் – துலங்கிடவே

மருவு மல்லிகை முல்லை சண்பகம்
வாச மலருடன் பூசும் சந்தணம்
தருகதம்ப கஸ்தூரி புனுகுசவ் வாது – கொண்டே

கமுகு வெள்ளிலை முத்துச் சுண்ணமும்
கனிகள் சர்க்கரை வகைகளும் கொண்டு
அமைய வேநடந் தேகிசங்கமர் அருகே – சேர்ந்தாள்.
(73)

வசனம்

அப்பொழுது சல்லமா தேவியும் சர்வாபரணமும் பூண்டுக் கொண்டு தெய்வ அரம்பையினும் அழகுடனே குமார சங்கமர் அருகே போய் நிற்க, அவர் பேசாதிருப்பது கண்டு என்ன சொல்லுவாள்:

சிந்து (கமாஸ்)

மோடியா யிருப்ப தேனையா சங்கம தேவா
மோடியா யிருப்ப தேனையா

மோடியா யிருப்பதேது —
நாடிஉம்மைத் தேடிமனம் நீடியே மலரணையில்
கூடவே வந்தாலிப்போது —
மோடியா யிருப்ப தேனையா

வேசியாகவே பிறந்துநான் ஆசையாய் மனதுகந்து
நேசமாய் வந்தால் மகிழ்ந்து பேசிடாமலே உகந்து
(மோடி)

யவ்வனப் பருவ மாது என்விரக மோபொல்லாது
ஆவலாய் வந்தால் நீரேது அணையாமலே இப்போது
(மோடி)

பொங்கமாய் என்னை யணைந்து பூவணையி லேபடுத்து
செங்கையால் முடிபிடித்து சேர்ந்திடாம லேசினத்து
(மோடி) (74)

வசனம்

பின்னும் சல்லமாதேவி குமார சங்கமர் வலப்பக்கத்
திலே மஞ்சத்தின்மேல் இருந்து சொலுவாள் :

சம்பை (சஹாரி)

நேசமுடனே இந்த வேசிவளவினில் வந்து
பேசாமலிருந்தவரைத் தேசந்தனில் காணேன்

தழுவி இதழமுதுண்டு தனத்தில் நகக்குறி யழுத்தி
இழைந்து மருவிட நீருமெழுந் தருளுமையா

சீனிசக்கரை யாவின் செய்யபால் முக்கனியும்
தானுமே அருந்தி என்னைத் தழுவியிடும் ஐயா

வெள்ளிலையும் செம்பிளவும் மிகுசாதி ஏலமுடன்
அள்ளியே நான்தருவேன் அருந்தி அருளய்யா

கதம்பகஸ் தூரிமருக் கதம்பசவ் வாதுடனே
சந்தணமும் விரைமலரும் தான்அணியு மையா

சங்கீதமான தம்புருவீணை படிக்கவோ செங்கையால்
பாதமலர் தீண்டிப் பிடித்திடவோ

வெட்டிவேர் மருக்கொழுந்து விசிறி காளாஞ்சியுடன்
தட்டில்புனுகு சவ்வாது தடவி திமித்திடவோ

கலகலெனக் கைவளையல் கரத்தினுலே துடையைக்
குலவுதாளத்தினிசை குத்தி வருட்டிடவோ

இன்னவகையினில் ஏதுஎன்னபணி செய்யநான்
அன்னபணி யின்னதென அருளிஉரை யீரே. (75)

வசனம்

இப்படி மதனலீலா விநோதமாகிய தம்புரு வீணை, தமிழிசைப் பதம், சிந்து ராகம் முதலானதும் வகை வகையாய்ப் பாடி சருவிய போதிலும் குமார சங்கமர் கொறுக்கை விட்டுக் கொண்டு நித்திரை பண்ணுவது கண்டு சல்லமாதேவி பின்னும் அணைத்தும் படுத்தும் சரசம் செய்த விதம் எவ்விதமோ வெனில்:

திரிபுடை (வராளி)

மெத்தவாகிய நித்திரையினி விழித்து எழுந்தே-
என்னிடக்
குத்துமுலையினைப் பற்றிசிறுநகக் குறிசெய் வீரே

வஞ்சியாகிய எனைக்கண்டேமிக
மயக்கமதமோ பேசாதிருப்பது
மிஞ்சவேகஞ் சாவைச்சாப்பிட்ட விரகந் தானோ

ஆண்டிலீலைகள் மெத்தஉண்டென்ன யாவரும்
சொல்வார்களே உம்மை
வேண்டி சொல்லினும் எழுந்திராதிது என்ன புதுமை

குற்றமானது வேசிமீதினில்
கொள்வரோ வினி காமுகரினி
சித்தம் மகிழ்ந்தொரு முத்தமளித்திதழ் தேனையருந்தீர்

ஆவல்தீரஎன் கோவைவாயிதழ்
அருந்தியேகர மலரினலெனை
தாவியணைத்தின்ப லீலைசுகமது தந்திடீரே. (76)

வசனம்

இப்படிச் சல்லமாதேவி தழுவியணைத்தும் காலொடு கால் பிணைத்தும் கையொடு கை சேர்த்தும் சரச சல்லாப லீலைகள் எத்தனைவிதம் செய்தும் சரீரம் அருக்

களியாமலும் அசங்காமலும் நித்திரை கொண்டிருக்கிற குமார சங்கமரைப் பார்த்து, சிலமொழி பேசுவாள்:

ஏகதாளம் (செஞ்சுருட்டி)

மோருக்கு வந்தவர் மொந்தையை ஒளித்திடில்
யாருக்குச் சேதம் அறிந்துகொள் வீரே

வழக்கினும் வேசியை மருவிடும் போதினும்
வெட்கமுற் றிருந்தால் விரும்புவர் எவர்தான்!

கரும்பினைத் தேடியே கண்டத்தை வாங்கினுல்
அருந்தினுல் அல்லவோ அதன்ருசி தெரியும்

செவ்விய அமளியில் சேர்ந்திடும் நாயகர்
இவ்வகை இருந்தவர் எவரையும் காணேன். (77)

வசனம்

இப்படி வெறுத்துரைத்து சல்லமா தேவி அதட்டியும் அசைத்தும் உருட்டியும் வெருட்டியும் எழுப்பவும் அசங்காமலிருந்த சங்கம தேவரைப் பார்த்து, பொழுது விடிந்துபோகுதென்று அங்கேது செய்தனள்:

திபதை

ஏதுசங் கமதேவா இதுவென்ன தூக்கம்
ஏதுநித் திரையிது என்னதான் அனந்தல்

விடிவள வாகிலும் மெய்யசை யாமல்
மடையரைப் பந்திகள் மட்டிகள் போலே

கும்பகர் ணனுக்குக் குறுக்கே பிறந்தவர்போல்
சோம்பி நித்திரைவளர் செகந்தனில் இல்லை

திங்களும் எரித்திட தென்றலே வீச
செகமெல்லாம் கறங்க கொங்கைகள் விம்மிட

கோல மதன் ஏவ
மோக விகாரமே மூனேந் ததினலே
ஆகமெலிந்தது ஆற்றிட மாட்டேன்

எழுந்தரு ளீர்சுக இன்பமே பருக
எழுந்தரு ளீரென்மேல் இனிதயை புரிந்து

கமலநின் கரத்தால் கனஸ்தனம் இறுக
அமையவே அணைந்திதழ் அமிர்தமே அருந்தி

யென் அல்குலின் நாகமே சீறியதன்
தந்திரத்தினல் வசமது படுத்தி

தாள்சிலம் பொலியெழச் சரிவளை புலம்பத்
தோள்புயங் குலுங்கிடத் துணைவிழி சிவப்பக்

கலந்தெனை மருவியென் காதல்தீர் என்று
வலியமேல் விழுகினும் மவுனமாய் இருக்க

ஆகமோ டாகமும் அழுந்திடக் கட்டி
மோகமாய் மோந்துதன் முகமுகம் சேர்த்து

நாணிடா வேசியில் நான்மடங் காகித்
தானுடைக் கூறையைச் சரித்துடன் நெகிழ்த்துச்

சங்கமர் தன்னிடத் தனியயனர் வேட்டி
செங்கையால் வீழ்த்ததி சீக்கிரத் தினிலே

சல்லமா தேவியும் தன்முலை மார்பில்
வல்லசங் கமர்தமை மகிழ்ந்துசேர்த் திடினும்

வாவிசேர் திருவணு மலையரு ணேசர்
கூவிய குரலொடு குழந்தையா னரே. (78)

வசனம்

இப்படி சல்லமாதேவி குமாரசங்கமரை எடுத்து மார்பிலே போட்டுக் கொண்ட உடனே குமாரசங்கம

ராகிய அருணாசலேசரும் அவ்வுருமாறி அப்பொழுது பிறந்த குழந்தையாகிக் கூவி [49]மார்பின்மீதிருந்தனர்.

சிந்து (தேவகாந்தாரி)

குழந்தையானாரே – சோணாசலேசர் –
குழந்தையானாரே

மேலுலகந்தனில் இந்திரர் மாதவர்
விண்ணவர் மாமுனிவோர்
சீலமுள நாரதர் துப்புரு கின்னரர்
சித்தவித் யாதரர்கள்

காவலர் வசுக்கள் [50]நவதிகபாலர்கள்
கடவுள ரானவரும் மாலும் அயனும்
அறியாத சோணேசர்
வல்லாள னுக்கொரு பிள்ளையதாகவே (குழந்தை)

பதினாலுலகத்திலே உள்ள தேவருக்கும் பல
விதமானவருக்கும் விரிவான எண்பத்து நாலு
லட்சம்சீவன் மிக வாழும் உயிர்களுக்கும்
சதமாகத் தந்தையும் தாயுமாகிநின்ற
தற்பரனருணேசனார்
மதிமுக சல்லமாதேவி தன்முலை மார்பினிலே
வந்துதான் விளையாடியே (குழந்தை)

விணணவர் பூமழைமாரி சொரிந்திடவே –
தமறையொலிய
கண்ணனும் நான்முகனும் களிகூர்ந்துதன் –
கணங்கள் களித்திடவே

பெண்ணரசியே எங்கள் அன்னை உண்ணாமுலை
பெருக்க மகிழ்ச்சியுற மண்ணுல காண்டிடும்
வல்லாள ராயன்தன் மனைதனிலே வந்து –
கனிவுடனே சிவன் (குழந்தை)

49. மடியில் 50. நவக்கிரக

செம்பவளக்கனி வாய்திறந்தே மெள்ள
தேம்பியழுதே உம்பர்களித்திட
காலும்காலும் தன்னை உதறிச் சற்றே அசைத்தே
அம்புவி யோர்கள் களிக்கச் செயமாக—
அழகுக்கண்ணை விழித்தே
இன்பமுடனே பிறப் பிறப்பில்லாத
ஈசர்சோணேசர் வல்லாளராசனுக்கு
(குழந்தையானாரே) (79)

வசனம்

இவ்விதம் அருணாசலேஸ்வரரும் பாலகனான குழந்தை வடிவானஉடனே சல்லமாதேவி பயந்து, வெருவி, கால், கை நடுக்கத் திடுக்கிட்டெழுந்து சேலை உடுத்திக்கொண்டு குழந்தையை மடியில் வைத்து வல்லாள ராசனைக் கூவியழைக்க அவரும் அதி சீக்கிரத்திலே அலறி எழுந்திருந்து ஆயிரம் சூரியன் உதயம் ஆனாற்போலே இருந்த குழந்தையைக் கண்டு அங்ஙனே திடுக்கிட்டு அதிசயமுற்று ஏதெனச் சொல்லுவான்:

சம்பை (ஆனந்த பைரவி)

வேயுறுதோள் [51]வேசியின்பம் வேண்டிவந்த
சங்கமரும்
மாயமாய்ப்போய்க் குழந்தைவடி வானதென்ன
[52]வாராத சங்கமர்கள் அதிரூபமாய்
மறைந்த ஆச்சரியமென்ன
வந்த சங்கமரிந்த விந்தையதுதான் செய்து
தந்திரமாய்த் தான்மறைந்த தகமைதான் என்ன
அருணாசலேசர் என்னை ஆட்கொள்ள வேண்டியோ
கருணைபுரிந்தே யன்பு காணவந் தாரோ. (80)

51. வேசியர்தன்இன்பம் 52. தான்வர பின்கூடவந்த சிறு சங்கமர்

## வசனம்

என்று வல்லாள ராசனும் பலபல விதமாய் நினைந்து அருணாசலேஸ்பரர் அன்பு சோதிக்க வந்ததே நிசம் என்று உறுதி பண்ணிக்கொண்டு அந்நேரமே மந்திரி பிரதானிகள், பிராமணர், பெரியோர்கள், ஸ்தானிகர், பத்தர், புலவர், வர்த்தகர், மற்றுமுள்ள பரிசனங்கள் எல்லாரையும் அழைக்கச் சொல்லி அனுப்பி, பட்டணத்திலே திருச்சின்னம், எக்காளம், சங்கு, தவளம் இப்படி முப்பத்திரண்டு சட்டத்தாள மேளங்களும் சங்கீதம் விநோதம் பாராட்டி சர்க்கரை வழங்குவித்து ஆனந்த சந்தோஷமாயிருக்க, அனேக சுபமங்கிலிய மாதரும் தாசிப் பெண்களும் கூடிச் சோபனம் கூறிக் கொண்டு அங்கேது செய்தனர் :

**திரிபுடை** **(சாரங்கா)**

தேவர் மாதவர் முனிவர் கடவுளர்
தீண்ட வரிதான சோதி மேனியைப்
பாவை சல்லமா தேவி கரத்தினில்-தாவியெடுத்தே

வேதன் மாலிவை பூசை செயவறி யாத சிவனடி
தாது மேனியை மாது சல்லமா
தேவி கைதனில் - மடியில் வளர்த்தி

ஆதி அரவத்தின் நஞ்சை யமுதாய்
அருந்தி தேவரைக் காத்த விமலர்க்குப்
போதப் பாலடைதன்னில் செவ்வெண்ணெய்-
புகட்டினாரே.

கங்கை மதிதனைத் தரித்த செஞ்சடைக்
கடவுளாகிய பரமனுருக்குப் பொங்கமாகவே
உச்சிக்கெண்ணெயும்-போதவணிந்தார்.

விழிகளாகவே இரவிமதிதனில்
விளங்கப்படைத்தருள் பரமனுருக்கு
அழகுபெறமை எழுதிநிலப்பொட்டு-அணிந்திட்டாரே
வஞ்சியாகிய தேவியிருவரும்
ஊமைமாநகர் மாதரனைவரும்
கொஞ்சியே கோதாட்டிமுத்தமும்-கொடுத்திட்டாரே.
(81)

வசனம்

இவ்விதம் சல்லமாதேவி, மல்லமாதேவி யிருவரும் புவனகர்த்தாவாகிய குழந்தையை முழுகவாட்டி செவ்வெண்ணெய் புகட்டி, உச்சிக்கெண்ணெயிட்டு, அஞ்சனமெழுதி கொஞ்சிக் கோதாட்டிச் சீராட்டி மடியில் வளர்த்தி யிருக்க இரவு விடிந்தது. பட்டணத்திலுள்ள பல ஜனங்களும் அறிந்து திரண்டுவந்து கூடி அரண்மனை வாசலில் நிறைந்து கண்டதிசயமுற்றனர்.

ஏகதாளம் (இந்துஸ்தானி பியாக்)

சிறந்திடும் பகிதனில் சனங்கள் எல்லாரும்
அறிந்தனர் [53]அவரவர் அதிசயமானார்
சல்லமா தேவிக்குச் சங்கரனொரு
பிள்ளைய தானது புதுமையென்றாரே
நிருபதி செய்திடும் தருமத்தால் கருணைசெய்தனர்
அருணேசர் என்றனரே. (82)

திபதை

அனைவரும் இப்படி அதிசய மகிழ்வாய்க்
கனிவுறக் கண்டுகண் களியது கூர்ந்து
வளர்ந்துதான் மின்னொளி மறைந்தெழுவது போல
தேனொத்த விழியது சிமிட்டிடும் பொழுதில்

53. மிக மிக

வளமைசேர் வடிவது மாற்றி
அளவிலாக் கருணைசேர் அருணசலேசர்

நாரிஉண் ணமுலை நாயகி யுடனே
ஏர்பெற நந்திமேல் இமையவர் சூழ

நாரணன் இந்திரன் நான்முகன் துதிக்க
சீரணி மாதவர் செயசெய செயவென

தும்புரு நாரதர் துதியிசை படிக்க
ரம்மைஊர் வசிமுதல் நாட்டியம் [54]படிக்க

சுந்தர மங்கையர் சோபனம் கூற
அந்தர மலர்மழை அமரர்கள் பொழிய

உருத்திர கணங்களும் உம்பரும் நெருங்க
வருத்தமாய் மாதவர் மாமறை யோத

அடியவர் முத்தமிழ் அன்பர்கள் துதிக்க
துடியொடு கறங்கத் துந்துமி யார்ப்பப்

படிமிசை யருணையம் பதிநகர் தனிலே
இடமுறு வீதியில் எங்கணும் பரவி

அன்னமும் ஏனமும் ஆகிய அவனும்
கண்ணுற அடிமுடி காண்கிலார் வந்தார்

மலைவடி வாகிய வள்ளல்தான் வந்தான்
உலகெலாம் போற்றிய உம்பர்கோன் வந்தான்

கொங்காமல் வல்லாளன் கொடுப்பது அறிய
சங்கம ணகிய தற்பரன் வந்தான்

வல்லாள ராசன்தன் மனதுகண் டுகந்து
பிள்ளையாய்ப் பிறந்திடு [55]பிஞ்ஞகன் வந்தான்

காசியில் காஞ்சியில் கனகமன் றதனில்
வாசியென் றுமைக்கிடம் அருளினன் வந்தான்

54. இயற்ற 55. பிரானிதோ

கானகப் பூனையைக் கடிந்தமன் னனுக்குத்
தான்மகிழ் அடியிணைத் தந்தவன் வந்தான்

ஒருமொழி தன்பெயர் உற்றவர் தமக்கு
அறியதற் கதியது அளிப்பவன் வந்தான்

என்று சனங்கள் இப்படியெடுத் துரைப்ப
மன்னவன் செவியுற மலர்க்கணீர் தோன்ற

அந்நகர் செனமெல்லாம் யாவரும் காண
கன்னியர் இருவரும் கண்டுகண் களிக்க

வெள்ளிமால் நிகரெனும் விடைமிசை ஏறி
துள்ளிமான் மழுவும் சூலமும் ஏந்தி

நீறணி மேனியும் நிறைமகி ழுடனே
வீறுடன் அரசன்முன் விளங்கிநின் றனரே. (83)

வசனம்

அப்போது அருணாசலேஸ்வரரும் குழந்தை உருவமானது மாறி மறைந்து கண்மூடி விழிப்பளவிலே ரிஷபவாகனரூடராகி உண்ணாமுலையம்மையுடனே பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலான தேவர்களுடனே ஆலயத்திலிருந்து கோபுர வாசலில் புறப்பட்டு, சகலமான சனங்களும கண்டு வணங்க வல்லாளராயன் அரண்மனை வாசல் முன்னிலையிலே வந்து பிரதிஷ்டமாகக் காட்சி கொடுத்து நின்றனர்.

சிந்து (சிந்துபைரவி)

கண்டான் வல்லாளனிரு கண்கள் களிகூர
அண்டர்நா யகனான அருணாசலேசர்தன்னைப்

புண்டரீகன் மால்வேதன் பொன்னுலகில் மாதவரும்
அண்டர்கள் மிகப்புகழ்ந்து அவர்கள் புடைசூழ

தொண்டரெனும் அடியார்கள் தொழுதுசெய
செயசெயென
தெண்டிரையில் அருணைநகர் தேர்வீதி தன்னில்[56]வர

செங்கையினில் பிரம்பெடுத்து திரள்விலக்க நந்தீசர்
பொங்கமுட னேயமரர் பூமழைகள் தான்பொழிய

திங்களொடு கங்கைநதி செஞ்சடையி லேவிளங்க
மங்கையுண்ணு முலைமாது மகிழ்ந்திடத் திலிருக்க

[57]மான்மழுவும் புலியுடையும் மகிழ்ந்தணிந்த
வெண்ணீறும்
தேன்கமழும் கொன்றைமலர் சிறுநகையும் முகமும்

தான்குழையி லரவாடத் தன்கருணைப் ப்ரிவோடு
நானிலத்தில் [58]தனியாட நாடிவந்த சிவன்தன்னை
கண்டான் வல்லாளன் இருகண் களிகூர. (84)

சம்பை (ஹமீர் கல்யாணி)

கண்டளவிலே மனதுகளிப்பாகி அரனடியில்
தொண்டனாய்ப் பணிந்துகரம்
சிரத்திற் குவித்தன்பாய்த்

தேவியர்கள் இருவருடன் சிவனை வலமாகிவந்து
தூவிப்[59]பொன் மலர்சொரிந்து
தொழுது துதிசெய்வான்

ஆதியே அருணேசர் அடியேன் துயர்சிறிய
பேதையேன் யென்மீதில் கிருபைபோதவே செய்தீர்

செய்ததவஞ் சிறிதெனினும் செகத்திலெனைப் பெரிதாக
அய்யனே ஆள ஆட்கொண்டு ஆண்டுகொண்டீரே

நாயினும் கடையேனை நாடியொரு பொருளாக
நேயமுட னேயடிமை நீர்கொள்ள வந்தீர்

56. வரக்கண்டரான். 57. கன்றுன மான்மழுவும் 58. தனையான
59. பூமலர்

தந்தைதா யாகியே தானுலகைக் காக்கும்நீ
மைந்தனுய் எனைக் காக்க[60]வந்தீர் இப்பொழுது.
(85)

வசனம்

பின்னும் வணங்கி பயபக்தியுடனே ஏதெனச் சொல்லுவான்:

திரிபுடை (சஹாரி)

குமாரசங்கம ளுகிளனையாட்
கொள்ளவந்தநின் கருணையானது
அமலனே கருத் தறிவிலாதநான்

வேசிதன்சுகம் விரும்பிசல்லமா தேவிதனை
அறியவசமோ
மருவாமல் மடிமிசை ஆசைசெய்தாக்கிய
மகிமை அடியேனறிய வசமோ

அருணைநகருறை கணிகைமாதர்கள்
அவரவர்க்கொரு புருஷனுகவே
கருணைசெய்தநின் அருளை அடியேன் காணவசமோ

அறமும் நெறிமையும் அன்பும் அறியா அசடனேனை
யாட்கொள்ள வந்திடும் பரிவும் கருணையும்
மகிமையும் என்னுல் பார்க்கவசமோ.
(86)

வசனம்

பின்னும் ஏதென்று துதித்துப் போற்றுவான்:

ஏகதாளம் (ஹம்சாநந்தி)

மலைமகள் பாகா மலையுறை வோனே
மலைவடி வாகிய [61]யமலனே போற்றி

60. வந்தவாறிதுவே 61. வலவா

கருணு கரனே கருணைக் கடலே
கருணைப் பொருளே [62]கர்த்தரே போற்றி
முத்தி யளித்திடும் [63]மூர்த்தியே முதலே
முத்திக் கரசே முதல்வரே போற்றி
அருணைக் கரசே அருணையின் வாழ்வே
அருணு சலனே அரனே போற்றி
வேதா போற்றி விமலா போற்றி
வேதா கமத்துறை விரவே போற்றி. (87)

கலித்துறை

மண்ணுேர்கள் போற்றிய [64]பர்வதராசனின்மகளே
நன்ருகவே யெனைவந்து ஆண்டுகொண்டிடும்
நாயகியே
அண்ணுமலையாரிடப்பாகந் தன்னில் அமர்ந்தவளே
உண்ணுமுலை உமையே மறவே[65]னடியேன்
உத்தமியே. (88)

வசனம்

இப்படி துதித்து வணங்கி நின்ற வல்லாளராயனை நோக்கி அருணுசலேசரும் திருவாய் மலர்ந்தருளி ஏதெனச் சொல்லுவார்:

திபதை

பரிவினுல் துதித்தடி பணிந்திடு வோரைக்
கருணையால் நோககியே களிப்புற மகிழ்ந்து
அருணை நாயகர் மகிழ்ந்து ஆன்புடன் மொழிவார்

62. காத்தாய் 63. முத்தே 64. இமையவன்மலைமகளே
65. உன் இணையடியே

தரணியில் உனக்குநேர் தானெங்கு மில்லை
எவரேனும் கேழ்க்கினும் இல்லையென் ருமல்
அவனியில் கொடுப்பவர் யாவரும் இல்லை

அன்புகண் டுன்மனம் அறிந்திட வேண்டி
நன்மைசேர் சங்கம ராகவே வந்து
வேசியர் இன்பமும் வேண்டியே கேழ்க்கில்

ஆசைசேர் மனைவியை யனுப்பினீர் அதனல்
விரதமே யழிந்திடா விதமது குறித்து

சரசமே செயவரும் சல்லமா தேவிதன்
மைந்தனுய்த் தோன்றிடும் மன்னனே மனத்துள்

சிந்தனை தீர்த்தனம் செகமெலாம் அறிய
பிள்ளையாய்ப் பிறந்துநாம் பெரும்புகழ் அளித்தோம்

வள்ளலே [66] வேண்டும் மானிலம் புரந்து
நம்பதி சேர்ந்தெந்த நாளுமங் கிருப்பீர்

உம்பர்கள் மாதவர் உலகெலாம் அறிய
தந்தை [67] தன் னுரிமையும் தான்செய்வோ மென்று

இந்திரன் மாலயன் எவர்களும் அறிய
அருணைச லேசரும் அகமகிழ்ந் துரைத்தார்.

கருணை உண் ணுமுலை கன்னிநா யகியும்
சல்லமா தேவியைத் தான்மிகப் புகழ்ந்து

வல்லி யரசியராய் வாழ்ந்திடும் என்று
அருளுரை செதனள் அரியயன் மகவான்
பரிவொடு அவரவர் பலப்பல புகழ்ந்தார்

சிறந்திடும் அருணேசர் தேவர்க ளுடனே
மறைந்துதன் னுலயம் அதனுளே அமர்ந்தார்

வல்லாள ராயனும் மாதர்க ளுடனே
[68] இல்லறம் அடைந்துதான் இருந்தனு தினமும்

66. வேண்டும்நாள் 67. தாயுரிமையும் 68. இல்லிடை

சோணேசர் மலரடி தொழுதறம் புரிந்து
நாநிலம் புரந்துநன் ருடெல்லாம் மதிக்க

திங்கள்மும் மாரிதான் சிறந்துமே பொழிய
எங்கினும் கீர்த்தியாய் இருந்துவாழ்ந் தனனே. (89)

திரிபுடை (சுரடி)

அருணை நாயகன் கருணை யாகவே
அன்புசேர் சிறு பாலனுகிய

சரிதையாம்கதை யதனை யுலகெனும்
தரணிதன்னிலே அன்பினுலிசை அறிந்துபடிப்பவர்

ஆசை பெறச்செவி அதனிற் கேழ்ப்பவன்
இன்ப மாயுரை எடுத்துமொழிகுவர்

எழுதினேர்கள் ஈசனருளால் உலகு புரந்தவர்
இந்திரன்என வாழ்வுபொருந்தியே

ஆசை மைந்தர்க ளோடு நூருண்
டளவும் இருந்து பரிவினே டருணசலமென

உரைசெயும்பல னுலுகந்தவர்
அரிய கயிலையில் மேவி சிவனுருவாகுவாரே. (90)

வசனம்

இந்த சிவசரித்திரமாகிய வல்லாள மகாராசாவின் கதையைக் கேட்டபேரும் படித்தபேரும் எழுதின பேரும் நோயற்று வாழ்வுண்டாய் மைந்தர்கள் பதினறும் பெற்று இந்திர செல்வம் பொருந்தி, குபேர சம்பத்தும் பொருந்தி ஆயுசு நூறும் இருந்து அருண சலேஸ்வரர் அருளினுலே சிவபதவி சேர்ந்திருப்பார் கள் என்றவாறு.

மங்களம் (சௌரு)

செயமங்களம் [69]நித்திய சுபமங்களம்

மாதவனும் மாலயனும் அறியாத சங்கரர்க்கும்
மங்கை உமைக் கிடபாகம் கொடுத்தவர்க்கும்

கேதகையை இழிவாகப் பழித்தவர்க்கும்
கிரிவடிவ மானவர்க்கும்

ஆதியருணபுரியில் அமர்ந்தவர்க்கும்
கங்கைமதி தரித்தவர்க்கும்
கருண கடாட்சருக்கும்
செங்கை மழுமானேந்தும் தேவர்தமக்கும்

வேங்கையுரி [70]யணிந்தவர்க்கும் மிகுரிஷப
வாகனர்க்கும்
பொங்கரவின் பணிபூண்ட புனிதர் தமக்கும் -
(செயமங்களம்)

வாரிவிடமுண்டவர்க்கும் மறலிதனையுதைத்தவர்க்கும்
சேரவே மன்மதனைச் செயித்தவர்க்கும்

வீரமாய்த் திரிபுரத்தை மிகுநகையில் எரித்தவர்க்கும்
பார்அறிய [71]மலையாகப் பறந்தவர்க்கும் -
(செயமங்களம்)

அரசாளும் வல்லாளன் அன்புதனக் காயுகந்து
பிரியமுடன் மைந்தனுய்ப் பிறந்தவர்க்கும்

சுற்றம் புகழும் அருணகிரி சோணசலேசருக்கும்
[72]அருணையுண் ணமுலைத் [73]தா யம்மைதனக்கும்

செயமங்களம் நித்திய சுபமங்களம் (91)

69. சதா 70. போர்த்த 71. மலையரியகப் பரிந்தவர்க்கும்
72. அரிய 73. அம்மனுக்கும்

கவி

அண்ணா மலையார் திருவருளால் அகமகிழ்ந்து
அன்புடனே
தண்ணாய்ப் புகழ்ந்து வல்லாளன்கீர்த்தி
அஷ்டக் கியானமனம்
பண்ணால் இசையாய் வாசிப்போர்
பரம பதத்தி லனுதினமும்
விண்ணோர் அமுத மலர்பொழிய மிகவும்
செல்வ மிகவாழ்வார். (92)

வல்லாளராசன் அஷ்டக்கியானம் முற்றும்.

விக்குருதி ஞு கார்த்திகை மீ 26உ சோமவாரநாள் கிருத்திகா நட்சத்திரம், சதுர்த்தசி தனுசு லக்கினத்தில் பொய்கைப்பாக்கம் பரசுராம வாத்தியார் குமாரன் முத்துநாராயணன் கை அஸ்த லிகிதம்.

சிவமயம்.



இந்திய இசைத்துறையில் எம்.ஏ., பட்டம் பெற்றவர்கள். சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்று, ''இரவிவர்மா நினைவு தங்கப் பதக்க''மும் பரிசும் பெற்றவர்கள்.

கர்நாடக இசைத்துறை வல்லுநர்களான, காலஞ்சென்ற சங்கீத கலாநிதிகள், மதுரை திரு. மணி அய்யர், மகாராஜ புரம் திரு. விசுவநாத அய்யர் ஆகியோரிடம் முறையாகக் கர்நாடக இசை பயின்றவர்கள்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில், 'குரல் பயிற்சி' பற்றி ஆராய்ச்சி செய்து எம்.லிட்., பட்டமும் 'தென்னிந்திய இசை நாடகங்கள்' என்பது பற்றி ஆராய்ச்சி செய்து பி எச்.டி., பட்டமும் பெற்றிருக்கிறார்கள்.

இவ்வாராய்ச்சிக் கட்டுரைகள் இரண்டும் விரைவில் அச்சாகி வெளியாக விருக்கின்றன. பல கருத்தரங்குகளில் தலைமை ஏற்றும் கட்டுரைகள் படித்தும் இருபதிற்கு மேற் பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளியிட்டும் இருக் கிறார்கள். இசைத் துறையில் மேடைக் கச்சேரிகளும் செய்து வருகிறார்கள்.